உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-23
மன்மத - பங்குனி-9
22-3-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

பாலை

தலைவனது பிரிவினுல் மெலிவுற்ற தலைவி, அவன் சென்ற காட்டைப் படைத்த கொடியோனை வெறுத்து நொந்து கூறியது.

ஐதே கம்மலிவ் வுலகுபடைத் தோனே, வையேர் வாலெயிற் றேரண் ணுதற் குறுமகள், கைகவர் முயக்க மெய்யுறத் திருகி, யேங்குயிர்ப் பட்ட வீங்குமுலை யாகந், துயிலிடைப் படூஉந் தன்மைய தாயினும், வெயில்வெய் துற்ற பரலவ லொதுக்கிற், கணிச்சியிற் குழித்த கூவ னண்ணி, யான்வழிப் படுநர் தோண்டிய பத்தல், யானையின நிரை வௌவுங், கானந் திண்ணிய மலைபோன் றிசினே 240 :நம்பாலத்தனுர்

கூரிய அழகிய வெள்ளிய பற்களையும் ஒள்ளிய நெற்றியையுமுடைய இளமையான தோழீ! நம் காதலர் கையணைத்து முயங்கும் முயக்கமானது மெய்யுறுதல் வேண்டாமென்று மாறுபடுதலால் ஏங்குகின்ற பெருமூச்சுடன் கூடிய பருத்த கொங்கையையுடைய எனது உடப்பானது, இனித் தனியே கிடந்து துயிலுவதனுல் துன்புறுந் தன்மையதாயினும், வெயில் வெப்பமுள்ள பரல் மிக்க பள்ளத்தின் ஒருபுறத்திலே குந்தாணிபோற் குழித்த கிணற்றை அடைந்து பசுக்காவலராகிய இடையர் பறித்த சிறுகுழியிலுள்ள நீரை யானையினம் வரிசையாகச் சென்று குடிக்கின்ற அவர் சென்ற கானமானது திண்ணிய மலைபோல எனக்கு அச்சத்தைத் தருகின்றது. அக்கானத்தைப் படைத்தவன் அதிற் பையச் சென்று துன்புற்று வருந்துவாஞக.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

வெள்ளத்தின் சடிலத் தான்றன் வெஞ்சிலை யிறுத்த வீரன்
தள்ளத்தன் ஞவி சோரத் தனிப்பெரும் பெண்மை தன்னை
அள்ளிக்கோண் டகன்ற காளை யல்லன்கோ லாங்கோ லென்பா
ளுள்ளத்தி னூச லாடுங் குழைநிழ லுமிழ விட்டார்

:-கம்பநாட்டாழ்வார்

உரை:-'வெள்ளத்தின் சடிலத் தான்தன்-கங்கை வெள்ளந் தங்கிய சடையையுடையவனுகி, சிவபெருமானது, வில்வினை-வில்லை, இறுத்த வீரன் - ஒடித்த திறலுடையவனுகிய அவ் வீரன், தள்ள-நிலை பெயரும்படியாக, தன் ஆவி சோர - தனது உயிர் சோர்வடையத் தக்கநிலையில், தனிப் பெரும் பெண்மை தன்னை - ஒப்பற்ற பெரிய பெண்மைத் தன்மையினை, அள்ளிக்கொண்டு-கவர்ந்து கொண்டு அகன்ற-நீங்கிய, காளை அல்லன்கொல் - கட்டிளங்காளை அல்லனே, ஆங்கொல் என்பாள்-அல்லது அவனே தானே என்று ஐயுறுபவளாகிய சிதாபிராட்டியினது, உள்ளத்தின்-மனத்தைப்போல, ஊசல் ஆடும்-ஊசலாடுகின்ற, குழை - குண்டலங்களை, நிழல் உமிழ - ஒளிவிடும்படி, இட்டார் - அணிந்தார்கள்' என்பதாகும்.

கல்வியிற் பெரியவரான கம்பர் பெருமான், வடமொழியில் ஆதிகாவியமென்றும் இதிகாசமென்றும் பாராட்டப் பெறுகின்றதும் வான்மீகமுனிவர் இயற்றியதுமான இராம காதையைச் செந்தமிழ்ச்செய்யுள் வடிவத்திலாக்கித் தமிழுலகத்திற்குத் தந்தாரெனினும், அப்பெருங் காதையைத் தமிழ் நாகரீகத்திற்கேற்றவாறு, மூலவரலாற்று அடிப்படையிற் பிறழ்ச்சி நேராதபடி சிற்சில இடங்களில் மாற்றித் தமிழ் வரலாருகவே தந்துள்ளாரென்பது. அறிஞர்கள் அறிந்த உண்மையாகும். அவரது காவியத்தில் வடநாட்டில்உள்ள க ங்

கையுங் கோதாவரியும் பெயர் சொல்லிக் குறிக்கப்பட்டிருந்தாலும், அங்கே தமிழ் நாட்டுப் பொருநையும் காவிரியுந்தான் புலப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

செந்தமிழ் மொழியின் சீஞ் சுவைப் பண்பும், அந்நாட்டு மக்களது அறஞ்சான்ற மனநிலையும் பொருட்பகுதியின் ஒருகூறாகிய அகத்துறை அமைதியினாலேயே இனிதறியப்பெறும். வடமொழி மரபிற்கேற்பக் காப்பியஞ் செய்த வான்மீக முனிவரைப்பின்பற்றி, அவரது நூலைத் தமிழாக்க முற்பட்ட கம்பர்பெருமான், அதனைத் தமிழ்மரபிற்கேற்பத் திருத்தஞ் செய்துகொண்டபடியினாலேதான், முதனூலைவிட மொழிபெயர்ப்புநூல் ஓரோரிடங்களில் சுவை விஞ்சியதாக அமைந்திருக்கக் காண்கின்றோம்.

அவ்வாறு அவர்வடவர்மரபுவரலாற்றைத்தமிழர் மரபுக்கேற்ப மாற்றிக்கொண்ட இடங்களுக்குள், காப்பியத் தலைவர்களின் திருமணத்தைச் சார்ந்த நிகழ்ச்சிகளைச் சொல்லும் இடங்கள் சிறப்புடையனவாகும்.

தாடகைபாற் கைவண்ணத்தையும் அகலிகைபாற் கால்வண்ணத்தையும் காட்டிவிட்டுத் தவச்செல்வராகிய விசுவாமித்திரரோடும் தம்பியாகிய இளைய பெருமாளோடும் மிதிலைமா நகரத்து இராசமா வீதியில் இராமபிரான் செல்லும்போது அத்தலைவனையும் அவனுக்குரிய தலைவியாகிய சீதா பிராட்டியையும் சந்திக்க வைக்கிறார்கம்பநாடார். இது வான்மீகத்திற் காணப்பெறாத நிகழ்ச்சி.

அன்பாலும் அறிவாலும் குணத்தாலும் பிறவற்றாலும் ஒப்புயர்வற்ற தலைவனும் தலைவியும், ஊழ்வினை கூட்ட ஒருவரையொருவர் எதிர்ப்பட்டுக் கண்ணாலும் உள்ளத்தாலும் உடம்பாலும் கலந்து இன்புறுதல் தமிழர்முறையென்று அகப்பொருள் நூல்கள் கூறுகின்றன. காதலர்களின் முதற் கலப்பை மொழியப் புகுந்த திருவள்ளுவர் 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனு மில' என்றார்.

இதனைத் தழுவியே கம்பநாடரும் 'எண்ணரு நலத்தினாளினைய நின்றுழி, கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றையொன், றுண்ணவு நிலைபெறா

துணர்வு மொன்றிட, அண்ணலு நோக்கினு னவளு நோக்கினுள்' என்று தலைவர்களது காதல் தோற்றத்தை அறிவுறுத்துவாராயினர். கண்கள் ஒன்றனை யொன்று கவ்வ, இருவரது உணர்வும் ஒன்றுபட நோக்கொத்த நிலையில் தெருவில் நடந்துசென்ற செம்மலின் உருவம், பிராட்டியின் தோற்றத்திற்கு அப்பாற்பட்டுமறைந்தது.

தான் கண்ட தலைவனது நல் லுருவத்தைத் தனது உள்ளத்தில் அழகொழுக எழுதிப் பார்த்து மையல் நோயால் வாட்டமுற்றுள் பிராட்டி. காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலருவதல்லவா மையல்நோய்? கண்வழி நுழைந்த கள்வன், மண்வழி நடந்த அடி வருந்தப் போனமையைநினைந்து வாடுகின்ற பிராட்டியின் ஆற்றுமையை மிகுதிப்படுத்த அந்தி மாலையும் வந்தது.

அதனைத் தொடர்ந்து வந்த இருள், நிலவு, அன்றில், ஆம்பல் ஆதியன பிராட்டிக்கு பெருந் துன்பத்தை உண்டாக்கின. காம வெப்பத்தாற் கலங்குகின்ற அவளது மேனியில்வாசக்கலவையை வாரி வாரிப் பூசினர்கள். பூசப் பூச அவள் புலர்ந்து புழுங்கினுள். ஆசைநோய்க்கு மருந்தும் உண்டோ?

பிராட்டிக்கு மனங் கொடுத்துச்சென்ற பெருமான், சனக மன்னனுக்கு விசுவாமித்திரனல் அறிமுகப்படுத்தப் பெற்றுன். 'காதலென்ற னுயிர் மேலு மிக் கரியோன் பாலுண்' டென்று கரிய செம்மலது வரலாறும் புயவலியும் கௌதமன் கூறப் பிராட்டியின் மணப் பணயமாகக் குறிக்கப்பெற்ற வில்லேற்றலைப்புரிந்து, அம்மெல்லியலை இவன் ஏற்றுனென்றுல், "என்னை இடர்க்கடலிலிருந்து ஏற்றிய புண்ணியம் இவனுக்கு உண்டு எனச் சனகன் வேண்டினுன்.

கார் முகம் பல்லாயிரவர் பலத்தால் கொண்டுவரப் பெற்றது. ஆடகமால்வரை போன்ற அதனைச் சீதைக்குச் சூட்ட நீட்டும் ஏடவிழ் மாலைபோல எடுத்தான் இராமன். எடுத்ததைக் கண்டவர்கள் இற்றத்தைக் கேட்டார்கள். இந்நிகழ்ச்சியை நேரிற் பார்த்த நீலமாலை என்னும் தோழி விரைந்துபிராட்டியிடம் வந்து செய்தியைக் கூறினுள்.

தெருவகத்துக் கண்ட செம்மலுக்குச்சிந்தையைக் கொடுத்து

விட்டு அதனையும் அதனைக் கவர்ந்து சென்ற சிங்கத்தையும் தேடி வாடிக்கொண்டிருந்த பிராட்டி, நீலமாலை கூறிய நிகழ்ச்சிகளைக் கேட்டதும், 'வில்லை ஒடித்த வீரன் தான் கண்டு காதலித்த அண்ணலோ? அன்றோ? என ஐயுற்றாள்.

நீலமாலை, 'கோமுனியுடன் வருகொண்ட லென்றபின், தாமரைக் கண்ணினானென்ற தன்மையா, லாமவனேகொல் என்று ஐயம் நீங்கி'னாள் பிராட்டி மீளவும் சிறிது ஐயுறவு நிகழ்' சொல்லிய குறியினைத் தோன்றலேயவ, னல்லனே லிறப்பனென் றகத்து ளுன்னினாள்.

இவ்வாறு பிராட்டியினது உள்ளத்தில் தோன்றிய ஐயப்பாடு, மணப்பந்தருக்குச்சென்று பெருமானை நேரிற் பார்க்கும் வரை இருந்துதானே தீரும்? ஒருவர் காட்டக் காணுதுதானே கண்டு மனங்கலந்த பிராட்டியிடம், அக்கலப்பு நிகழ்ச்சியை அறியாத நீலமாலை அவனே தான் இவன் என்று சொல்ல எவ்வாறு முடியும்? தெருவகத்திற் சென்றதைச் சீதை மட்டும் அறிவாள். நெடுவில் ஒடிந்ததை நீலமாலை மட்டும் அறிவாள். இரண்டு நிகழ்ச்சிகளையும் நிகழ்த்தியவன் இராமனே என்றுனும் ஒன்றுென்றை ஒவ்வொருவரே அறிவாராதலின் பிராட்டியின் ஐயம், தெளிவுபெற இடமில்லாதிருந்தது.

சீதையின் உள்ளத்தில் காதலனைக் கண்ணெதிரே காணுமனவும் ஐயம் நீங்காதிருந்ததென்பதைக் கம்பர் பெருமான் மேற்கண்ட பாடலால் அழகுபொருந்தக் காட்டியுள்ளார். மணமகளாகிய பிராட்டிக்குத் தோழியர்களாகிய மங்கையர் ஆடைஅணிகள் புனைந்து அழகு செய்கின்றார்கள். அப்போது அவளது காதில் குழையும் அணியப்பெறுகிறது. அது முன்னும் பின்னுமாக ஆடியபடியே, சீதையின்மனநிலையை ஆசிரியருக்கு நினைவூட்டுகிறது. அக்குழை ஊசலாடியது போலவே பிராட்டியின் உள்ளமும் ஐயத்தால் ஊசலாடியதென்று ஆசிரியர் கூறும் அழகு அறிந்து போற்றுதற்குரியதாகும்.

### ரசாயன உரம்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் இந்தியாவின் நைட்ரஜன் ரசாயன உர உற்பத்தியை 3,80,000 டன்னிலிருந்து 16லட்சம் டன்னுகஅதிகரிப்பதற்கு உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

உடற்சேவை அடுத்தபடி தான். ஆகவே ஈசுரசேவை முற்பட்டும் சனசேவை அதனைத் தொடர்ந்தும் நிகழ வேண்டும். தம் உயிரைவிட்டவர்க்கே நாத்திகரோ நவீனரோ கூறுஞ் சன சேவை உவப்புடையதாகும். 'எங்கெழிலென் ஞாயி றெமக்கு' 'வானந் துளங்கிலென்...ஒருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே' என்றது திருமுறை. அத் திருமுறை யாசிரியன்மார் சனோபகாரிக ளல்லரோ? மக்கள் தம் ஆக்கைக்கே இரை கொட்டிப் பிறகு அவ்வாக்கையைக் காக்கைக்கு இரையாமாறு விடுத்து மீண்டும் பிறப்பதற்கே தொழிலாகிப் போகும்படி அவருக்கு உபதேசிக்கவும் உபகரிக்கவும் அவ்வுத்தமர் விரும்பார்.

'பக்தி என்பது கடவுளுக்கு வழிபாடு செய்வதல்ல, பிரார்த்தனை செய்வதல்ல, ஏழைகளைக் காப்பாற்றுவதுதான் பக்தி. இது தான் தமிழ்நாட்டின் மதம்' என்று நவீனர் கூறியது முன் காட்டப்பட்டது. இதைவிட நாத்திக முண்டா? அந் நாத்திகம் தமிழ்நாட்டு மதமாம். தமிழ் நாட்டு நாத்திகமானாற் குற்றமில்லைபோலும். கடவுளை வழிபடுவதும், பிரார்த்திப்பதும் பக்தியல்ல என்ற அவர் 'சமய நெறி - மதத்தின் கொளகைகளை நாம் கடைப்பிடித்து வாழ்ந்தால் தான் பிறர்க்கென வாழும் தலைமையைப் பெறமுடியும். தன்னலம் இல்லாது பிறர்க்கென வாழும் வாழ்க்கையை வேறு எங்கும் பெற முடியாது' (26-8-55 தமிழ்நாடு), 'சேவை...இன்று சமுதாயத்திடம் சொல்லப்படுவதெல்லாம் நம் மதம் கொடுத்த பிச்சைதான்' (12-9-55 தினமணி) என்றும் சொல்கிறார். ஏழைகளைக் காப்பாற்றுவது தான் பக்தி என்பதும், சமயத்தால்தான் தன்னலமற்று வாழ முடியும், சமயங் கொடுத்த பிச்சையே சமூக சேவை என்பதும் எவ்வளவு முரண்! பொறுப்பற்ற வாயிற்றான் முரண்கள் வரும். சமயங் கொடுத்த பிச்சையே சமூகசேவை யென்றால் சமயாபிமானம் சமயாசாரசீலம், ஈசுர

பக்தி முதலியவே சமூக சேவைக்குமுன் வேண்டப்படு வது என்பது சித்திக கிறது. 'ஈசனுக்கன் பில்லா ரடியவர்கன் பில்லா ரெவ்வுயிர்க்குமன் பில் லார் தமக்குமன் பில்லார்' என் றது சித்தியார்.

சமயத்தைப் பற்றியோ, சித் தாந்த சாத்திரங்களைப்பற்றியோ பெருமுழக்கமிட்டுப் பேசுவோர் பலரும் மக்களுக்குப் புரியும் வழி யில்-சமயம் என்றால் என்ன, சம யத்திற்கும் வாழ்க்கைக்கும் என்ன தொடர்பு, மனிதன் எவ் வாறு சமயவாழ்வு வாழ்தல் வேண்டும் என்பனவற்றைத் தெளிவாகப் பேசாமல், சமயக் கட்டுக்கதைகளைப் பேசி மக்கள் அறிவைப் பாழாக்குகின்றனர். ....இக் கேடுகளை வைத்துக் கொண்டு சமயம் வளரவில்லை... என்று...அனைவரும் ஓலமிடு கின்றனர்' (28-6-55 தமிழ் நாடு என்கிறார் நவீனர்- பெரு முழக்கமிட்டுப் பேசும் அவர் சமயத்தைப்பற்றித் தெளிவாகப் பேசாமலிருக்கலாம், சமயக் கட் டுக்கதைகளையே பேசலாம். அத னால் மக்களறிவு பாழாவது உண்மையானால் அப்பாழ் ஒரு மடங்குதான். ஆனால் நவீனர் அச்சமயத்தைப்பற்றி விபரீதமே பேசுவர்- அது மக்களுக்குப் புரியும் வழியிலுமிருக்கும் உலகநூலெனக் கழிக்கப்பட்டது வரலாற்று நூல். அதிலுள்ள கதைகளையும் அவர் பேசுவர். அதனால் மக்களறிவு பாழாவது நிச்சயம். அப்பாழ் நூறுமடங் காகும். அதை அவரறிக. அவர் அவ்வாக்கியத்தில் மூன்றுவினாக் களைக் கேட்டிருக்கிறார். அது சித்தாந்தசாத்திரங்களைப் பற்றிப் பெருமுழக்கமிட்டுப் பேசுவோ ரைப் பரிகசிக்கவேயாம். அந் நவீனர் எழுதிய எழுத்துக்க ளில் நான் படித்த அளவில்அவ் வினாக்களுக்கு அவரே சரியான விடை கூறியதாகத் தெரிய வில்லை.'எல்லப்பசெட்டிலக்க ஏக லக்க' என்பது தெலுங்குப் பழ மொழி. சைவத்தை வளர்க்க அவரை நோக்கி எவர் எவ்வினாக் கேட்டாலும் அப்பழமொழிப் படி அவர் கூறும் விடை ஒன்றே. அது மேனன் கூறிய அரிச்சுவடிப்பாடம். ஆனால் சைவசித்தாந்திகளை இகழ்வ தற்கு அவர் முந்திக்கொள்கிறார். சித்தாந்த சாத்திரம் வல்லவரே அவ்வினாக்களுக்கு விடை கூற வல்லார். எப்படி? 'ஓது சமயங் கள் பொருளுணரு நூல்க ளொன்றோடொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள் -யாது

(10ம் பக்கம்பார்க்க)

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

மன்மத பங்குனி-9

# காரைக்காலம்மையார்

தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருமானது திருவாக்காகிய திருத்தொண்டர் புராணத்தால் இடம் பெற்றுள்ள நாயன்மார்களுள் பெண்பாலடியவர் மூவருள்ளனர். அவர்கள் காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசியார், இசைஞானியரர் என்பவர்களாவார்கள்.

இவர்களுள் காரைக்காலம்மையாரது வரலாறு, தமிழகத்துப் பண்டைக்காலப் பெண்மணிகளின் கல்வியறிவு மாட்சிமையும் செப்பமாகச் செய்யுள் செய்யும் சிறப்பையும் தெள்ளிதிற் புலப்படுத்திக்கொண்டிருக்கிறது. திருஞானசம்பந்தருக்கு முன்பேயே பண்ணும் தாளமும் பொருந்திய பாடல்களை இயற்றிய பெருமை அம்மையாருக்கு உண்டு.

இவர் பாடிய திருப்பதிகம் 'மூத்த திருப்பதிகம்' என்று வழங்கப் பெறுவது கொண்டு இவ்வுண்மையை அறியலாம். வணிகர்குடியின் மணிவிளக்காக வந்து தோன்றிப், பணியரவம் பூண்ட பரமனடிப் பத்தியில் இடையறாது திளைத்துநின்ற இவ்வம்மையாரது வரலாறு, இம்மையிலும் மறுமையிலும் இன்பப்பேறெய்த வேண்டு

மேன்னும் குறிக்கோளேயுடைய வர்களுக்கு ஒரு நல்ல வழிகாட்டி யாகும்.

அம்மையாரது குழவிப் பருவத்தில் அவரது பயிற்சிச் சொற்களா யமைந்திருந்த அனைத்தும் ஆண்டவனைப் பற்றியனவே என்பதை 'வண்டல்பயில் வன வெல்லாம் வளர்மதியம் புனைந்தசடை, அண்டர் பிரான் திருவார்த்தை' என்பதால் சேக்கிழார் பெருமான் உணர்த்துகின்ரூர். அம்மையாரது திருவாக்காக அமைந்துள்ள சிவபெருமான் திருவந்தாதியில் 'பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல், சிறந்துநின், சேவடியே சேர்ந்தேன்' என்பதை மேற்கண்ட சேக்கிழார் பெருமான் திருவாக்குக்குரிய அகச்சான்ருகக் கொள்ளலாம்.

முன்னேப் பிறவிகளிற் சென்ற பதிபுண்ணிய முதிர்ச்சியினுலேயே அம்மையார் கருவிலே ஞானத் திருவுடையவராகத் தோன்றிப் பிறந்தநாள் தொட்டுப் பிஞ்ஞகனேப் பேணும் பெருவாய்ப்பைப் பெற்றவராக ஆயினர். அந்தவாய்ப்புத் தலையினுல் நடந்து கயிலை செல்லுந் தகுதியையும் அவருக்கு ஆக்கிக் கொடுத்தது.

அம்மையார் கயிலைக்குச்சென்று ஆண்டவனை நேரிற் கண்டு, அவனுல் 'அம்மையே என அழைக்கப் பெற்ருர். அப்போது அவர் இறைவனிடம் வேண்டியவை 'அவன்பால் இறவாத இன்ப அன்பும், பிறவாமையும், பிறப்புண்டேல் அவனே என்றும்மறவாமையும், அவன் ஆடும்போது அவனடிக் கீழிலிருந்து பாடும் பணியும் எனத் திருத்தொண்டர் புராணம் கூறுகின்றது.

வாழ்க்கையினுலும் திருவாக்கினுலும் தென்னுட்டை யுய்விக்க வந்த புனிதவதியாரின் திருநாள் **29-3-56** (பங்குனிச்சுவாதி)வியாழனன்று வருகிறது. அந்த நாளேக் குடும்பவிழா நாளாகக் கொண்டாடி இன்புறுவது நமது கடமையாகும்.

---

சமயம் பொருளால் யாதிங்கென்னி னிதுவாகு மதுவல்லதெனும் பிணக்கதின்றி-நீதியினு லிவையெல்லா மோரிடத்தே காணநின்றது யாதொரு சமய மதுசமயம் பொருளால்' என்பது முதல் வினவுக்கு விடை. 'வாழ்வாவது மாயமிது மண்ணாவது திண்ணம்' என்றது திருமுறை. அவ்வாழ்நாள் வழியடைக்குங் கல்லே அச்சமயம். அது அவ்வாழ்க்கைக்குமுற்றுப் புள்ளி வைக்கவே அவ்வாழ்க்கையோடு தொடர்பு கொண்டது- இது இரண்டாவது வினவுக்கு விடை. 'நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலு நடந்தாலு-மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலு-மன்றாடு மலர்ப் பாத மொருகாலு மறவாமை -குன்றாத வுணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார்' என்பது மூன்றாவதற்கு விடை. அவற்றை விளங்கத் தெரிந்த அவர் விளக்கிச் சொல்லவும் வல்லவராய்த்தா னிருப்பர். மக்களும் புரிந்து கொள்ளக் கூடியவரே. ஆனால் நவீனரின்போலி வேடமும் விபரீத பிரசாரமுமே குறுக்கிடுகின்றன. மக்களைத் திகைப்பிப்பன அவை தான். இனிக் கல்வித்துறைகள் பல. ஒவ்வொரு துறைபற்றியுங் கட்டுக்கதைகளும் பல. அவை அவ்வத்துறையிலுள்ள உண்மைகளை விளக்கும், அதற்காகவே அவற்றை அவ்வத்துறை மேதையர் கட்டினர். ஆகலின் அந்நவீனரின் நிந்தைகளை அவை சிறிதும் பொருட்படுத்தா. அவை என்றுமிருக்கும். அவற்றால் உலகிற்கு வருவது நலமே. அப்படியே சமயவுண்மைகளை விளக்குவன சமயக்கதைகள். அவையுங் கட்டுக்கதைகள்தானெனக் கொண்டாலும் சமயத்துறை வல்லாரே அவற்றைக் கட்டினுராதல்வேண்டும். அவை மக்களின் சமயஅறிவை விளக்குவ அன்றிப் பாழாக்கா. வரலாற்றின் வழிவந்த கதைகளோ ஆசிரியருக்காசிரியர், காலத்துக்குக்காலம், இடத்துக்கிடம் முரணிக்கிடத்தலே பெரும்பான்மை சமயக்கொள்கைகளுள் சிலவற்றையாவது அவற்றால் விளக்க முடியுமா? திருவள்ளுவர் திருக்குறளில் சமயக் கட்டுக்கதைகளை எடுத்துக்காட்டியே ஆங்காங்குச் சிலவுண்மைகளை விளக்கினர். தேச சரித்திரக் கதைகளுள்ஒன்றாவது அந்நாலில் இல்லை அன்றியும் சிவாஜி, காந்திஜிமுதலியோரைச் சமயக்கட்டுக் கதைகளே உருப்படுத்தின. அங்ஙனமாக அவற்றைத் தூஷிக்கும் அச்சைவரை என்னென்பது? அன்ன தூஷணைகளே சைவம்

வளராமைக்கு அடிப்படைக் காரணமென்க.

'புதிய தமிழகத்தில் மதம் காரணமாக...மக்களிடையே வேற்றுமை காணப்படுதல் கூடாது' (26-1-56 தமிழ்நாடு) என்கிருர் நவீனர். அதன் கருத்தென்ன? சமயங்களின் பன்மையே கூடாது என்பதா? பல சமயங்களிருக்கலாம், அவை பற்றிய பூசல்கூடாதுஎன்பதா? முதலாவதெனின், 'நான்சைவன்' (21-1-56 தமிழ்நாடு) என்று தம்மை விளம்பரஞ்செய்து கொண்ட அவர் பல சமயங்கள் வேண்டாமென்ருலும் சைவ சமயமிருக்க வேண்டுமென விரும்புதல் அவர்க்குக் கடன் சைவமுந் தொலைக என அவர் விரும்பினுல் அவர் செய்து கொண்ட விளம்பரம் எதற்காம்? அறிவுள்ள சைவர் அதனுல் ஏமாறமாட்டார். இரண்டாவதெனின் அக்கூற்றிற் புதுமையில்லை. எல்லாருஞ் சொல்வதைத்தான் அவர் சொல்கிருர். சமயங்கள் பலவாயின் பூசல் நேருமோ? அதற்கஞ்சி அப்பன்மையைத்தான் நீக்கி விடமுடியுமா? சமயங்களில் அரசியல் முதலிய உலகவிவகாரங்கள் புகுந்தால் மாத்திரம் பூசல்நேரக்கூடும். அவ்வுண்மையை வரலாற்று நூல்களிற்காண்க. அவை புகுதாதபடி அரசே நேரிய சட்டம் வகுத்துக்கொள்வது நலம். கொண்டால் அவ்வப்போது நேரக்கூடிய பூசலை அவ்வரசு சமனப் படுத்திவிடும்.

(தொடரும்)

## செங்கோல் ஆதீனம்

பெருங்குளம் மார்ச்சு 14

இவ்வூர் பூ சண்முகத் தேவர் குமாரர் பி எஸ் பால்பாண்டியத் தேவர் பரம்பரை இந்து மதத்தைச்சேர்ந்தவர். 1938ம் வருஷத்தில் கிறிஸ்துவ மதத்தைத் தழுவினுர். செங்கோல் ஆதீனம் மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகசுந்தரசத்திய ஞான பரமாசாரிய சுவாமிகளிடம் ஷியார் விண்ணப்பித்துக் கொண்டபடி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் ஷியார் பால்பாண்டித் தேவருக்கும் அவர்குமாரர் பாஸ்கரனுக்கும் முறைப்படி சிவதீக்ஷை செய்து வெண்ணீறு அருளி ஆசிபுரிந்தார்கள்.

---

## இலக்குமிபுரம்

சொக்கலிங்க வித்தியாசாலையில் ஸ்ரீ மீனாட்சி சங்க 30வது ஆண்டு 10வது மாதக்கூட்டம் 15-3-56 மாலை வித்தியாசாலை உதவி ஆசிரியர் திரு எஸ். மகாதேவய்யர் தலைமையில் நடைபெற்றது. இறைவணக்கத்திற்குப் பிறகு சொ வி மாணவ மாணவிகளின் பேச்சு பாட்டு கும்மி கோலாட்டங்கள் நடிப்பு முதலியன நடைபெற்றன.

தலைவர் முடிவுரைக்குப் பின் நன்றிகூறப்பட்டு நாட்டுவாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

---

## வரப்பெற்றோம்

காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகத்தினர் வெளியிட்ட அறுபத்து மூன்று நாயன்மார்கள் சைவ சந்தானசாரியராதிய திருநெறித் தொண்டர்களின் துன்முகி ஆண்டுத் திருநட்சத்திரப் படம் வரப்பெற்றோம். இது இருபத்திரண்டாவது ஆண்டு வெளியீடு ஆகும்.

## நோட்டீஸ்

தேவகோர்ட்டை சப் கோர்ட்டு

S. C. 178 of 1955

நெற்குப்பை ராம. ராம. ராமனுதன்செட்டியார் —வாதி

பள்ளத்தூர் அ. ராம. அழ. சுப்பையாசெட்டியார் —பிரதிவாதி

ஷை பிரதிவாதி என்பவருக்குத் தெரிவிப்பதாவது:

தாம் வாதிக்கு 20.9-52உ ரூ 1000க்கு எழுதிக்கொடுத்திருக்கும் பிராம்சரி நோட்டின்படி அசல்வட்டி கூடிய துகை ரூ 1180-0-0 வறப்பற்ற வாதி உமது பேரில் ஷை நம்பரில்வியாஜ்யம் செய்திருப்பதில் உமக்கு Substituted Service -க்கு ஆர்டராகி 30-3-56 வாயிதா ஏற்பட்டிருப்பதால் ஷை தேதியில் கோர்ட்டில் ஆஜராகி உமக்கு எதிர் வாதமிருந்தால் தெரிவித்துக்கொள்ளலாம்.

G. Raghava Iyengar

தேவகோட்டை 16-3-56 } வாதி அட்வகேட்

## திருப்பனந்தாள் பேரறக்கட்டளைகள்

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமியவர்கள் இதுவரை செய்துள்ள தர்ம மூல நிதி திருமுறை வளர்ச்சிக்கென 24 தர்மங்கள் ரூ 3,29,000; கல்வி வளர்ச்சிக்கென 45 தர்மங்கள் ரூ 5,60,700; சைவசித்தாந்தம் பரப்ப 7 தர்மங்கள் ரூ 1,56,000; அன்னதானம் 82 தர்மங்கள் ரூ 19,33,500; வைத்திய உதவி 5 தர்மங்கள் ரூ 1,22,500; பொது தர்மங்கள் 47 ரூ 4,76,245 ஆக தர்மங்கள் 210 ரூ 35,77,945 ஆகும்.

---

## தெரிந்து கொள்ளுங்கள்

1955ல் மொத்தம் ரூபாய் 8,33,48,29,240 மதிப்புள்ள பலாக ரூபாய் நோட்டுகளும் பாங்கு நோட்டுகளும் நாசிக் ரோடி உள்ள நாணயப்பத்திரங்கள் அச்சகத்தில் அச்சிடப்பட்டன.

இந்தியாவில் பருத்தியின் சராசரி ஏக்கர் விகித மாசூல் 1948-49ல் 61 பவுண்டாக இருந்தது, 1954-55ல் 92 பவுண்டாக அதிகரித்திருக்கிறது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் 35 சர்க்கரைத் தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்படும்.

30 கோடி ரூபாய் அங்கீகரிக்கப்பட்ட மூலதனமுள்ள 'நங்கல் பெர்ட்டிலைசர்ஸ் அண்ட் கெமிக்கல்ஸ் லிமிடெட்' என்ற பெயரில் இப்போது பதிவு செய்யப்பட்டுள்ள ஒரு கம்பெனி, இந்திய சர்க்காரின் நங்கல் ரசாயன உர-கன திரவ திட்டத்தின் நிர்வாகத்தையும் கட்டுப்பாட்டையும் மேற்கொள்ளும்.

இதுவரையில் 11 ராஜ்யங்களில் 22 கோசதனங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் 5,000 கால்நடைகள் உள்ளன.

பல்வேறு ராஜ்யங்களிலுமுள்ள 27 பயிற்சி நிலையங்களில் சுமார் 367 கிராம சேவகிகள் இப்பொழுது பயிற்சிபெற்றுவருகின்றனர்.

# புயலுக்குப்பின்...

மு. சிங்காரம்

பாம்பாற்றில் பெருவெள்ளம் வந்து இருபது ஆண்டுகளாகி விட்டன. என்று மக்கள் சொல் வதற்கு ஒரு முடிவு காணத் தான் நேற்று வெள்ளம் வந் ததோ? என்னவோ?

இரு கரையிலும் நின்ற மரங் கள் நேற்றையப் புயலின் காரண மாய் ஒடிக்கப்பட்டுத் தண்ணீ ரில், நீந்தும் மீன்களைப் போல இழுத்துச்செல்லப்பட்டன.

மதகுகளின் மூலம் வந்து சேரும் தண்ணீரின் ஓசையும், அருவிகளின் ஓசையும் அந்த வட்டாரத்தையே தேவலோக மாக்கின.

கரையோரங்களில் வசித்து வந்த செம்படவர்களின் குடிசை கள் கடலில் அகப்பட்ட சிறு தோணி போல் மறைந்து போயின. அவர்களதுகால்நடை களும், வலைகளும் ஏன் அவர் கள் குடும்பத்தார்களில் சிலரும் நீரோடுநீராய் அதனடியில் காணும் மணலோடு மணலாய்ப் போயினர்.

நீரின் போக்கையும், அதனால் ஏற்படும் ஓசையையும் கண்டு, கேட்டுத் திரும்பிக்கொண்டிருந் தனர் செங்குன்றத்து மக்கள்.

இவ்வளவுக்கும் நடுவில் எதை யும் காதில் வாங்கிக்கொள்ளா மல், ஒடித்துப் பாழாக்கப்பட்ட தென்னை மரங்களின் நடுவில் இராமனாதன் நின்றுகொண்டி ருந்தான். அவ்விடத்தில் அவ னைத்தவிர வேறு ஆட்கள் இல்லை. அவனுடைய முகம் வருத்தம் தோய்ந்து காணப்பட் டது. கண்களிலிருந்து தாரை தாரையாகநீர் வடிந்துகொண்டி ருந்தது.

மீனா......மீனா...என அவன் வாய் முணுமுணுத்துக் கொண் டிருந்தது. தண்ணீரின் வேகத் தையும், அவன் கண்ணீரின் வேகத்தையும்விட வேகமாக அவனுடைய எண்ண அலைகள் கடந்தகாலத்தை நோக்கிச் சென்றன.

ஃ ஃ ஃ

கடலை நோக்கி வேகமாகச் செல்லும் அலைவீச்சில் சிக்கிக் கொண்டால், எவ்வளவு திறமையாக நீந்தத் தெரிந்தாலும் கரை சேர்வது கடினம்தான். அது போன்றதுதான் இளம் வயதிலுள்ள காதலும்.

புத்தூரில் இருக்கும் தமிழ்க் கல்லூரியில் படிக்கும் மாணவர்களில் ஒருவன்தான் இராமனுதன். செங்குன்றத்துப் பிள்ளை குலத் தோன்றல் அவன். அவனுடைய தந்தைபெயரைக் கேட்டாலே அவ்வட்டாரத்து மக்கள் கைஎடுத்து வணங்குவார்கள். இல்லை என்போர்க்கு இல்லை என்று சொல்லாமல் அள்ளி வழங்கும் வள்ளல் அவர். தாயில்லாத மகனை வளர்க்கும் முறையறிந்து, மறுமணம்செய்து கொள்ளாமல் கண்போல் காப்பாற்றிவந்தார்மாணிக்கம்பிள்ளை. (இராமனுதனின் தந்தை)

செங்குன்றத்திலிருந்து புத்தூருக்குச் செல்லும் வழியில்தான் பாம்பாறு ஓடிக்கொண்டிருக்கிறது. புத்தூர் செங்குன்றத்திலிருந்து எழுமைல் தொலைவில்உள்ளது. ஆகவே தினம் இராமனுதன் சைக்கிளிலேயே சென்று கொண்டிருந்தான்.

காலை எட்டுமணிக்கு வீட்டை விட்டுப் புறப்பட்டு ஆற்றங் கரையில் சிறிதுநேரம் இருந்து விட்டுத்தான் கல்லூரிக்குச்செல்வான். மாலையிலும் சிறிதுநேரம் அங்குத்தங்கிவிட்டுத்தான் செல்வான்.

ஒரு நாள்: தென்னை அடர்ந்த ஓரிடத்தில் ஒரு குடிசையின் வாயிலில் ரதியினும் அழகுடைய மங்கை ஒருத்தி காட்சி தந்தாள். இராமனுதனுடைய காலும், கண்ணும்அவன் கட்டுப்பாட்டை மீறிக் குடிசையை நோக்கிச்சென்றன.

'நீங்க யாருங்க?' கணீ ரென்று கேட்டாள் அம்மங்கை.

'நான்......நா...ன்'

'ஓ...உங்களுக்குத் திக்கல் உண்டா? மெதுவாகச் சொல்லுங்க' என்றாள்,

இராமனுதனுக்குத் தன்னை மீறிக் கோபம்வந்தது. இருந்தாலும் அடக்கிக்கொண்டு, 'இல்லை,செங்குன்றத்து மாணிக்கம்பிள்ளையின் மகன் இராமனுதன். உங்க அப்பாவைப் பார்க்கணும்' என்றான்.

(தொடரும்)

## உங்களுக்குத் தெரியுமா?

இந்தியாவில் ஏக்கர் விகித கோதுமை மாகூல் 1948-49ல் 566 பவுண்டாக இருந்தது, 1954-55ல் 713 பவுண்டாக உயர்ந்துவிட்டது; ஏக்கர் விகித நெல் மாகூல் 1950-51ல் 596 பவுண்டாக இருந்தது1953-54ல் 805 பவுண்டாக உயர்ந்துவிட்டது.

இந்திய சர்ககார் குடிசைக் கைத்தொழில்கள், சிறு கைத் தொழில்கள் ஆகிய துறைகளிலிருந்து 1952ல் வாங்கிய பொருள்களின் மொத்த மதிப்பு 1.13 கோடிரூபாய்; 1955ல் வாங்கிய வற்றின் மொத்த மதிப்பு 2.10 கோடி ரூபாய்.

அகில இந்திய ரேடியோ தற்போது பிரதி தினம் 27 இந்திய மொழிகளிலும் அந்நிய மொழிகளிலும் மொத்தம் 71 செய்தி அறிக்கைகளை ஒலிபரப்பி வருகிறது. அவற்றில் 28 அறிக்கைகள் வெளிநாடுகளுக்கான ஒலிபரப்புகளிலும் 43அறிக்கைகள் உள்நாட்டு ஒலி பரப்புகளிலும் ஒலிபரப்பப்பட்டு வருகின்றன.

1952 நவம்பரில் ஆரம்பிக்கப்பட்ட ஊழியர் பிராவிடன்ட் நிதித் திட்டமானது முக்கியமான ஆறுதொழில் துறைகளில் ஈடுபட்டுள்ள 15.4லட்சம் தொழிலாளர்களைக்கொண்ட 1,950 தொழிற் சாலைகளுக்குப் பிரயோகமாகிவருகிறது.

நங்கலில் ஏற்படுத்த உத்தேசிக்கப்பட்டுள்ள ரசாயன உர-கன திரவ தொழிற் சாலை, ஆண்டு ஒன்றுக்கு 2,00,000 டன் அம்மோனியம் நைட்ரேட்டும் 7முதல் 8டன் வரை கன திரவமும் உற்பத்தி செய்யக் கூடிய சக்திவாய்ந்ததாக இருக்கும்.

மத்திய சமூக க்ஷேம நல போர்டு 1955 அக்டோபர் வரையில் மொத்தம் 259 க்ஷேமநல விஸ்தரிப்புத் திட்டங்களைஆரம்பித்திருக்கிறது. பிரஸ்தாப காலத்தில் 1179 க்ஷேம நல நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டன.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-24
மன்மத - பங்குனி-16
29-3-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ,, 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை-தெளிவுரை

## பாலை

பொருள்வயிற்பிரிந்த தலைவனை நினைந்து வருந்திய தலைவியைத்தோழி ஆற்றுவிக்கத் தலைவிஎதிரழிந்துகூறியது.

உள்ளார் கொல்லோ தோழி கொடுஞ்சிறை, யுள்ளடி பொறித்த வரியுடைத் தலைய, நீரழி மருங்கி னீரயிர் தோன்ற, வளரா வாடை யுளர்புநனி தீண்டலின், வேழ வெண்பூ விரிவன பலவுடன், வேந்துவீசு கவரியிற் பூம்புத லணிய, மழைகழி விசும்பின் மாறி ஞாயிறு, விழித்திமைப் பதுபோல் விளங்குபு மறைய, வெல்லை போகிய பொழுதினெல்லுறப், பனிக்காற் கொண்ட பையுள் யாமத்துப், பல்லித ழுண்கண் கலுழ, நில்லாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே. 241

:—மதுரைப்பெருமருதனார்

தோழீ! வளைந்த சிறகையுடைய பறவைகளின் உள்ளங் கால் சுவடு பொருந்திய வரிகளை மேற்கொண்ட நீர்வற்றிய இடங்கள் தோறும் நுண்ணிய மணல் தோன்ற, மெல்லிய வாடைக்காற்று உளர்ந்து மிகவும் தீண்டுதலால் கரும்பினது வெளிய பூக்கள் பல ஒருசேர விரிவனவாய், அரசனுக்கு வீசும் கவரியைப்போல மெல்லிய புதல்தோறும் அழகுசெய்ய, மேகம் நீங்கிச் செல்லுகின்ற வானில் மாறி மாறி விழித்திமைப்பதுபோல் ஞாயிறு தோன்றித் தோன்றி மறையப் பகல்சென்ற மாலைப்பொழுதில் இரவு வரப் பனிபெய்யத் தொடங்கிய துன்பந்தருகின்ற நடுயாமத்தில், இமையையுடைய மையுண்ட கண்கள் நீர்பெருகும்படி, நில்லாதபொருட்பிணியாற் பிரிந்த தலைவர் நம்மைக்கருதியிருப்பாரோ?

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

தாமுமொரு பயப்படார் பயப்படுவார் தம்மையுந்தம் போற்செய் வார்போற்
காமரளி நுகராமற் கழிப்பூமே லடுக்கலுறுங் கணிதே னூற்று
மாமிதனை யறிந்துவெகுண் டெழுந்தென்ன வணிவேங்கைக் குடுமி
நாமநீள் கடல்பவளக் கரநீட்டிப் பற்றியிடு நலமு மோர்பால் [தன்னை

:-சிவஞான முனிவர்

உரை:-தாமும் ஒருபயப்படார்-தாங்களும் பிறிதொருவருக்கு எந்த ஒரு விதத்திலாவது பயன் படுகின்றவர்களாக இருக்க மாட்டார்கள், பயப்படுவார் தம்மையும்-அவ்வாறு பிறருக்குப் பயன் படுகின்றவர்களாயிருப்பவர்களையும், தம்போல் செய்வார் போல் - தடுத்துத் தம்மைப் போலப் பயனற்றவர்களாக ஆக்குகின்றவர்களை யொத்து, காமர் அளி நுகராமல்-அழகிய வண்டுகள் உண்ணமுடியாமல், கழிப் பூமேல்-நெய்தல் நிலத்துக் கழிகளிலே மலர்ந்திருக்கின்ற பூக்களின்மேல், அடுக்கல் உறுங் கணி-மலையிலே வளர்ந்திருக்கின்ற வேங்கை மரங்கள், தேன் ஊற்றும்-தமது பூக்களின் தேனைச்சொரிகின்றன; ஆம்இதனை அறிந்து-தகாததாகிய இச் செயலைப் பார்த்து, வெகுண்டு எழுந்தென்ன-சினந் தெழுந்ததைப் போல், அணி வேங்கைக் குடுமி தன்னை-அழகிய வேங்கைமரங்களினது உச்சிக் கிளைகளாகிய குடுமிகளை, நாமம் நீள் கடல்-அச்சத்தைத் தருகின்ற ஆழமான கடலானது, பவளக் கரம் நீட்டி - பவளக் கொடிகளாகிய கரங்களை நீட்டி, பற்றியிடும் நலமும் ஓர்பால்-பற்றிப்பிடிக்கின்ற நல்ல காட்சியும் ஓரிடத்திலே யிருக்கிறது' என்பதாகும்.

கற்பனை கொழிக்கும் கவி யாற்றல் படைத்த தமிழ்ப் பெரும்பாவலர் சிலருள், சிவ ஞான முனிவரும் ஒருவர். உரை நடைச் சிறப்பும் செய்யுட்சிறப்

பும் ஒரு சேரக் கொண்ட, இப் புலவர் பெருமானது கருத்தோ வியங்கள் பலவற்றைக் காஞ்சிப் புராணத்திலே காணலாம். புரா ணம் பாடிய ஆசிரியனது ஆற் றலை நன்கு அறிந்து கொள்வ தற்கு அப் புராணத்திலுள்ள நாட்டுப்படலம், நகரப்படலங் களே சிறந்த சாதனங்களாகும்.

ஒரு தலத்திற்குப் புராணம் பாடுகின்ற ஆசிரியன், அத் தலத்தை எவ்வாற்ருனுஞ் சிறப் பித்துக் கூறவேண்டிய கடப் பாட்டில், ஏற்றபெற்றி உயர்வு நவிற்சியைக் கையாளுவதும் இயல்பே. அவ்வாறு கையாளு கின்ற முறையில் ஆசிரியர்களு டைய உள்ளமும் செயலும் ஒரு வாறு வெளிப்பட்டுத் தோன்ற வும், ஆற்றல்நிலை புலப்படவும் காண்கின்ருேம்.

எல்லாப் புராணங்களிலும் நாட்டுப்படலம், நகரப்படலங் களில் கூறப்பெறும் கருத்தும் செய்தியும், ஏறக்குறைய ஒத்த நிலையிலேயே இருக்கக் காண்கின் ருேம். ஒரே செய்தியைப் பல ஆசிரியர்கள் சொல்ல நேரு கின்ற பொழுது. அவர்களது ஆற்றலை அளந்தறிவது நமக்கு எளிமையாகி விடுகின்றது.

திணைமயக்கம் என்பது எல் லாப் புராணங்களிலும் பேசப் படுகின்ற ஒன்று. முல்லை குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளுக் கும் உரிய பொருள்கள், அவ்வ வற்றிற்குரிய திணைகளை விட் டுப் பிறிதொரு திணைக்குச் சென்று கலப்பது, ‘திணைமயக் கம்’ எனப்பெறும். இத் திணை மயக்கத்தைப் பொருளாகக் கொண்ட செய்யுட்கள் பல காஞ் சிப் புராணத்திலே உள்ளன. திருவருட் பேறிஞராகிய சிவ ஞான முனிவரது, கற்பனைக் கருவூலமாக, இப்புராண நாடு, நகரப்படலங்கள் இருக்கின்றன.

வரலாறு பேசவந்த இவ்வா சிரியர், நூலிற்பல இடங்களில் உலகியலறங்களையும், கடவுட் செய்திகளையும் இயன்றவரை முறைபிறழாது புகுத்தி நல் லுதவி செய்திருப்பதற்குத் தமி மூலகம் என்றும் கடமைப்பட் டுள்ளது. இப்பாடலில், குறிஞ் சிநிலப், |டொருளும் நெய்தல் நிலப்பொருளும் ஒன்ருே டொன்று !கலந்து {மயங்கியநிலை உரைக்கப்பெறுகின்றது.

மக்களில் மதிக்கத் தகாதவர்க ளாக ஒரு சிலரிருக்கின்ருர்கள். தொண்டுசெய்வதே மனித வாழ் வின் குறிக்கோள். இதனை

யறிந்து ஒழுகுபவரே மனிதர். அல்லாதவர், வடிவத்தால் மனிதராயினும் மனிதரல்லாதவரே. பயனற்றார் உலகில் வாழ்வதால் வருவது துன்பம். பிறர்நலம் பேணுவதே பேரறமென ஒழுக்க நூல்கள் உணர்த்துகின்றன. 'ஒல்லும் வகையா னறவினை யோவாதே செல்லும் வாயெல்லாம் செயல்' என்ற திருக்குறள் இக்கருத்துப் பற்றியே எழுந்தது.

எவ்வாற்றானும் தம்மாலியன்ற உதவியைச் செய்பவர் சான்றோர். உதவி செய்வதற்குரிய வாய்ப்பு தமக்கில்லாத பொழுது, பிறர் செய்யும் உதவிக்கு இடையூறு செய்வதையாவது மேற்கொள்ளாதிருப்பது நல்லதல்லவா? இந்த இரண்டு பண்புகளும் மக்களுக்கு உடைமைகளாக ஆகிவிட்டால், நாட்டு நலன் கருதி வேறொன்றினும் நாட்டங்கொள்ள வேண்டுவதில்லை.

குறிஞ்சி நிலத்துக்குரிய பொருள் வேங்கைமரம். அதன் மலர்களிலுள்ள தேனை வண்டுகள் உண்ணுவதில்லை. எனவே பிறருக்குப் பயன்படாத பொருளாக அது இருக்கின்றது. நெய்தல் நிலத்துக்குரிய பொருள்கள் தாமரை முதலியன. அவற்றிலுள்ள தேனை வண்டுகள் மகிழ்ந்து அருந்தும். எனவே பிறருக்குப் பயன்படுகின்ற பொருள்களாக அவைகள் இருக்கின்றன.

கடலைச் சார்ந்ததான நெய்தல் நிலத்தின் அருகிலே குறிஞ்சிப் பகுதியாகிய மலை இருக்கின்றது. மலையிலே வளர்ந்திருக்கின்ற வேங்கையின் பூக்கள், கடற்கழியிலே மலர்ந்திருக்கின்ற தாமரை முதலிய மலர்களிலே தேனைச் சொரிகின்றன. வண்டுண்ணாத வேங்கைத் தேன் அது உண்ணுகின்ற தாமரைத் தேனிற் கலந்தவுடன் அத்தேனும் தனது இயல்பினின்று மாறி வேங்கைத் தேனைப்போலப் பயனற்றதாக ஆகிவிடுகின்றது.

இந்தக் காட்சியை அறிவுறுத்த வந்த ஆசிரியர், தாமும் பயன்தாராதவராய்ப், பயன்தருகின்றவர்களையும் கெடுத்துத் தம்மைப் போற் செய்கின்றவராயிருப்பவரது இழிதகவை நன்கு புலப்படுத்துகின்றார். செய்யத்தகாததைச் செய்கின்ற ஒருவனைக் குடுமி பிடித்திழுத்து வெருட்டுவது உலகவழக்கு. இத

னையும் இப் பாடல் குறிக்கின் றது.

பிறருக்குப் பயன்தாராத கேட்டைத் தன்னளவிலே வைத்துக் கொள்ளாது, பயன் தருவன வற்றிற்கும்கேடுசூழ்கின்ற வேங்கை மரத்தை, அறவடிவமாகிய கடல் குடுமிபிடித்துக் குனியவைக்கின்றதாம். கைகளுக்கு உவமையாகப் பவளத்தைக் கூறுவார்கள். கடலிலே படர்ந்திருக்கின்ற பவளக்கொடி, நீர்மட்டத்திற்கு மேலே நெடுந்தூரம் வளர்ந்து, அருகிலேயுள்ள மலையுச்சிவரை சென்று அதன் உச்சிக்கிளையை அழுத்துவது, வேங்கை மரத்தின் குடுமியைப் பிடித்திழுப்பது போலிருக்கின்றதென்னும் கற்பனை நயம் நம்கருத்துக்கு விருந்தன்றோ?

---

## — தூத்துக்குடி —

சைவ சித்தாந்த சபையின் 72ம் ஆண்டு நிறைவுவிழா ஏப்ரல்மீ 7, 8உகளில் சென்னை சைவ சித்தாந்த மகாசமாஜம் திரு ம பாலசுப்பிரமணிய முதலியார் பி ஏ பி எல் தலைமையில் நடைபெறும். பல வித்வான்கள் சொற்பொழிவுசெய்வார்கள்,

---




மந்திர சங்கிரகம்:— திருச்செந்தூர் ஸ்ரீ ஆலாலசுந்தரர் சிவாசாரிய சங்கவெளியீடு. மந்திரங்கள் பரமசிவனுக்கு வடிவங்களென ஞானநூல்கள் கூறும். சுத்தமாயையிலிருந்து சிவசத்தியால் தோற்றுவிக்கப்பெற்று அச்சிவசத்தியின் அதிட்டிப்பினால் பயனைத் தருகின்ற மந்திரங்களை ஆகமங்களிலும்அவற்றின் வழிவந்த பத்ததிகளிலுமிருந்து திரட்டி யெடுத்து உச்சரிப்புண்மை பெறப்படக் கிரந்த லிபியில் வெளியிட்டுள்ள சங்கத்திற்குச் சைவவுலகம் கடமைப்பட்டிருக்கிறது.

---

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

'தத்தஞ் சமயத் த கு தி நில் லா தா ரை - அத்தன் சிவன் சொன்ன ஆகம நூல்நெறி-எத் தண் ட மு ஞ் செயு மம்மையில் இம்மைக்கே - மெய்த்தண்டஞ் செய்வதவ் வே ந் தன் கடனே' என்றது திருமுறை. அவ்வடிப் படைகொண்ட அரசுக்கு அது எளிதில் முடியும். புதிய தமிழ கம் அந்நவீனர் கூ று கி ற ப டி அமைவதாயின் நாத்திகத் தமி ழகமாய்த்தானிருக்கும்; அல்லது இப்போதுள்ள த மி ழ கமாய்த் தா ன் நீ ளு ம். '...சமய...ம் பொதுவாழ்வில் தனியிடம்பெறு தல் கூடாது' (26-1-56 தமிழ் நாடு) என்கிறு ரவர். பொ து வாழ்வு என்பதும், த னி யிடம் என்பதும் எவையோ? சைவம் வளர அவரும் ஆவனசெய்வதா கச் சொல்கிறுர். அதற்கு அ வ் வாக்கியக் க ரு த் து எப்படித் துணைபுரியும்?

'மனிதனிடம் ப கு த் த றிவு இருக்கிறது. அவற்றை சரியாய் பயன்படுத்துவது கி டை யாது' (24-11-55 தமிழ்நாடு) என்கி றுர் ஈ-வெ-ரா. அப்படிப் படுத் தாமற் கோட்டை விட்டவருள் அவரும் ஒ ரு வ ர். 'திராவிட நாடு பிரியவேண்டுமென்று ஆந் திர, மலையாள, கன்னட மக்கள் கவலைப்படவில்லை. வடமொழித் தொடர்பு அவர்கள் மொழியில் இருப்பதால் அ வ ர் க ள் வட மொழி ஆதிக்கத்தை எதிர்க்க மனநிலை இல்லாதவர்களாய் உள் ள ன ர்' (18-7-55 தமிழ்நாடு) என்கிறு ர வ ர். திராவிடநாட் டுப் பிரிவுக்கு அவர் பல வ ரு டங்கள் உ ழை த் தார். அவ்வு ழைப்புக்கு மூலமான தம் பகுத் தறிவை அவர் சரியாகப் பயன் படுத்தவில்லை. அ வ் வு ழைப்பு வீணுயிற்று. அவர் சலித்துவிட் டார். பிறகுதான் அவர் மூளை யில் புதியதோர் ப கு த் த றிவு உதித்தது. அதுவே அ வ் வாக் கியம். 'அந்த மூன்று போராட் டங்களிலும் நாம் தோல்வியைத் தான் அடைந்தோம்' (19.8-55 தமிழ்நாடு) என்பது அ வ ரது மற்ருே ரழுகை. 'மதம் அழிந்த தால் அதன்மூலம் இ து வ ரை

கட்டுப்படுத்தி வந்த பெரிய சாதனம் அழிந்தேவிட்டதெனக் கூறலாம். எப்படி கடவுளை மதிக்காததால் மனிதன் மனதில் தோன்றும் குற்றமற்ற உள்ளுணர்வு மறைந்து விட்டதோ அதேபோல அரசன் மறைந்ததுடன் அரசாங்கத்தின் சட்ட திட்டங்களுக்கு மக்கள் வைத்திருந்த மதிப்பு பயம் போய்விட்டதென்பதை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்' (24-11-55 தினமணி) என்பது அவரது பிறிதோர் அழுகை. பல தமிழர் நாத்திகராகி அவர் கூறியதுபோலு மாயினர். அந்நனம் ஆக்கியவர் அந்த ராவே. அத்தீங்கை அவர் இப்போது உணர்கிறார். ஆகவே முட்டின பிறகு குனிவதுதான் அவரது பகுத்தறிவென்க. அந்தராவைத் 'தமிழ் நாட்டிலே சிந்திக்கும் ஆற்றல், எதையும் பகுத்துக் கூறும் பண்பு, அறிவுத்திறமை முதலியவை ஒரு சிலர்களுக்காவது ஏற்பட்டிருக்கிறதென்றால் அதற்குத் தமிழ் நாட்டின் ரூசோ ஈ-வே-ரா...தான் காரணம்' (21-1-56 தமிழ் நாடு) என்கிறார் அந்நவினர். Miltons Paradise Lost என்பது ஓர் ஆங்கில காவியம். அதில் கடவுளுக்கு விரோதியாகிய சாத்தான் வர்ணிக்கப்படுகிறான். அவனுடைய பகுத்தறிவு, பிரசாரம் அவற்றில் மயங்கி அவனது சுயமரியாதை இயக்கத்தில் உறுப்பினராய்ச் சேர்ந்த தேவதைகள் ஆகியவை அக்காவியத்தைப் படித்தார் அதிசயிக்கும்படி அபரிமிதமாய்ப் பேசப்பட்டுள்ளன. ஆயிரம் ரூசோக்களும் வால்டேர்களுமே அவனுக்கு ஈடாகார். அவனது பகுத்தறிவின் விளைவாகிய அவ்வியக்கம் அவனுக்கும் அவன் தோழர்களுக்கும் என்ன பயனைத் தந்தது? அதை அக்காவியத்திற் காண்க. ஈ-வெ-ரா அவ்வியக்கத்தையே தமிழகத்தில் ஆரம்பித்துப் பல வருடங்களாக நடத்தி வருகிறார். அதன் பலனென்ன? மேலே காட்டிய அவர் வாக்கியங்களே அதைப் புலப்படுத்துகின்றன.

## திருத்தம்

மலர்25, இதழ்22, பக்கம்6, பத்தி2, வரி 18ல் 'மக்கட் சேவை யென்ற' என்றதை ,மக்கட்சேவையே கடவுட் சேவை யென்ற' எனவும் பக்கம்7, பத்தி2, வரி8ல் 'விடுமோ' என்றதை 'விடுவரோ' எனவுந்திருத்தி வாசிக்க.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலகுருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

மன்மத பங்குனி-16

# மின்சார வெட்டு

வழக்கம்போல் இவ் வாண்டிலும் மின்சார வெட்டு உத்தரவு வெளியாகிவிட்டது. வருகிற எப்ரல் மாத முதல்தேதியிலிருந்து இருபத்தைந்து சதவிகிதம் மின்சார உபயோகத்தைப் பொதுமக்கள் குறைத்துக்கொள்ள வேண்டும்.

முன்னாளில் மனிதன் வாழுவதற்கு உண்டி, உடை, உறையுள் ஆகிய மூன்றுமே இன்றியமையாதன என்று குறிப்பிட்டார்கள். இன்றைய நமது வாழ்க்கையில் இவைமூன்றில் மட்டுமென்றி ஏனைய எல்லாவற்றிலுமே மின்சார உபயோகம் புகுந்துகொண்டு நம்மையும் மின்சாரமயமாக ஆக்கியிருக்கிறது.

இப்போதைய மக்கட் சமுதாய வளர்ச்சி முறைப் போக்கையெண்ணினால், இன்னுஞ் சில நாளில் மின்சாரமின்றி மனிதன் உயிர்வாழ முடியாது என்ற நிலைகூட வரலாமென்று தோன்றுகிறது. பட்டணங்களிலிருக்கின்ற மின்சாரத்தைப் பட்டிக்காடுகளுக்கும் கொண்டு செல்ல வேண்டுமென்பது, இப்போதைய அரசாங்கத்தின் முன்னணிக் குறிப்பும் முயற்சியுமாக இருப்பதை நாமறிவோம்.

மின்சார ஆற்றலால் நாம் அடைகின்ற பயன் பெரியதுதான். என்ருலும், நமக்குள் எவ்வகையிலும் கட்டுப்படாததொரு சக்தியையே நமது இன்றியமையாத் தேவையாக ஆகும்படி வைத்துக்கொண்டால் அதனுல் எவ்வளவு துன்பமுண்டாகுமென்பதையும் சிந்தித்துப்பார்க்கவேண்டும்

கடவுளாற்றல் என்றஒன்றைப் பற்றிக் கருதாதவர்களும்கூட, இயற்கையினுற்றலைப் பற்றி எண்ணுதிருக்க முடியாது. அணிமையில் வந்துசென்ற புயலும் மழையும் இயற்கையினுற்றல் வலிமையை ஒருவாறு நினைவூட்டி விட்டனவல்லவா?

பல மனிதர்களின் முயற்சியில் பலநாட்கள் உழைத்துப் பெறுகின்ற பயனைச் சிறுமுயற்சியில் சிலபொழுதுகளில் மின்சாரத்தின் மூலமாகப் பெற்றுவிடுகிருேமென்ருலும், எவ்வளவு! விரைவில் பயன் கிடைக்கின்றதோஅவ்வளவு விரைவிலேயே கேடுங் கிடைக்கின்றதொரு நிலையை அது உடையதாயிருக்கிறது.

கேட்டை அடிப்படையாகக் கொண்டதொரு ஆக்கம், மின்சாரத்தின்பாற்பட்டதென்பதை நன்ருக உணர்ந்திருந்துங்கூட, அதன் வளர்ச்சியிலும் பயனிலுந்தான் நம்முடைய கருத்து ஊன்றி நிற்கின்றது.

இந்த இருபத்தைந்து சதவிகித வெட்டு உத்தரவோடாவது அமையும்படி அரசாங்கத்தை இயற்கை விட்டுவைக்குமா என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம்.

இந்தவேளையில், எல்லாத் தேவைகளுக்கும் மின்சாரசக்தியை-அதுவும் நீர்த்தேக்கங்களின் நீர்நிறை குறையையோட்டிக் கிடைக்கின்ற போதுமின்சார சக்தியை நம்பி வாழுவது, எவ்வளவு தூரம் நிலையற்றதாயிருக்கின்றதென்பது பொதுமக்களின் நினைவுக்குவராதிருக்கமுடியாதல்லவா?

---

## மகா சிவராத்திரி வழிபாடு

(உண்மை விருப்பன்)

நமது சமூகத்தவர்கள் முன் காவிரிப்பூம்பட்டினத்திருந்த போது சிவாலய வழிபாடும் சுத்த போசனமுமுடையவர்களாயிருந்தார்கள். இந்த நாட்டுக்கு வந்த பின்பாண்டிய ரசா பட்டயத்துடன் அளித்த ஒன்பது நகரக் கோவில்கள் குல தெய்வமாயிருந்தும் சேர்க்கை தோசத்தால் சிறுதெய்வவழிபாடும் மாமிசஉணவும் பலருக்குப் பழக்கத்தில் வந்துவிட்டது.

மகாசிவராத்திரி தினத்தில் வழிபடவேண்டுவது சிவாலயங்களிலேயேயாம். சிவாலயம் இல்லாத ஊர்களில்கணேசுவரர் ஆலயம் சுப்பிரமணியர் ஆலயங்களில் வழிபாடு செய்யத்தககது. இவைகளைத் தவிர்த்துச் சிறு தெய்வ ஆலயங்களாகிய இராமர் காளி கிருட்டினர் கறுப்பன் ஐயனர் சோலையாண்டவர் பெத்த பெருமாள் பிடாரி மாரி துர்க்கை முதலிய தெய்வ வழிபாடு செய்வது சிறப்பில்லை என்பதை உணர்ந்து பிறப் பிறப்பில்லாப் பெருவாழ்வுடைய எல்லாம்வல்ல முழுமுதற் கடவுள் ஆலயமாகிய சிவாலயத்தில் வழிபாடு செய்து நல்ல சிவபுண்ணியப் பலன்களைப் பெற்று வாழும்படி செய்யுங்கள்.

## திருவிளையாடல் விரிவுரை

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் திருவியுள்ள அறக்கட்டளையின் படி 16-4-56முதல் 9-5-56வரை மதுரை ஆடி வீதி திருவருள் தவநெறிமன்றக் கூட்டு வழிபாட்டு மண்டபத்தில் மதுரை ஆதீனம் ஸ்ரீ லஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் தலைமையில் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர்கள் தா. ம. வெள்ளை வாரணம், மு. சுந்தரேசம்பிள்ளை ஆகியோர்நாடோறும் மாலை 7மணி தொடங்கித் திருவிளையாடற்புராண விரிவுரை நிகழ்த்துவார்கள்.

---

## தங்கம், வெள்ளி

மதுரை மார்ச் 27

| | | | |
|---|---|---|---|
| பாட்லா | 107 | 0 | 0 |
| சவரன் | 67 | 8 | 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 67 | 0 | 0 |
| வெள்ளி 100தோலா | 185 | 0 | 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 14 | 0 |

## அப்பர் நூல்நிலையத்திற்கு நிதி

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் திருப்பூந்துருத்தியிலுள்ள ஸ்ரீ அப்பர் திருமடத்தின் நூல் நிலையத்திற்கு ரூ 6500 நிதி வழங்கியுள்ளார்கள். இதன் ஆண்டு வருமானத்திலிருந்து புத்தகங்கள் வாங்கி மேற்படி நூல்நிலயத்திற்குக் கொடுக்கப்படும்.

## கோர்ட்டு விளம்பரத் திருத்தம்

தேவகோட்டை சப்கோர்ட்டு S C 178/55 நம்பர் கேஸ் வாயிதா தேதி 30-3-56 என்று சென்றவாரப் பத்திரிகையில் கண்டிருப்பதை 31-3-56உ என்று திருத்தி வாசிக்க.

## மின்சார விளக்கு

சென்னை மாகாணத்திலுள்ள மேட்டூர், பைகாரா போன்ற நீர்த்தேக்கங்களில் நீர் மட்டம் குறைந்திருப்பதையொட்டி ஏப்ரல் முதல் தேதியிலிருந்து எல்லாவகையான மின்சாரவினியோகங்களின் மீதும் 25சதவீத வெட்டு அமுலாக்கப்படுமென்று சென்னை அரசாங்கம் விடுத்துள்ள பத்திரிகைக்குறிப்பு கூறுகிறது.

விவசாயம், மருத்துவச்சாலைகள், ரயில்வே தண்ணீர் வினியோகம் சுகாதார ஏற்பாடுகள், 20 'யூனிட்டோ' அல்லது அதற்குக்குறைந்த அளவு மின்சாரத்தையோவீடுகளுக்குப்பயன்படுத்தல்போன்ற இன்றியமையாத காரியங்களுக்கு வினியோகிக்கப்படும் மின்சாரத்திற்கு மட்டும் இவ்வுத்தரவு பொருந்தாது.

### இளையாத்தகுடி

இளையாத்தகுடி கோவில் நகரத்தார்களின் வருஷாந்திரக் கூட்டம் 18-4-56உ புதன்கிழமை காலை 8மணி அளவில் இளையாத்தகுடி நகரவிடுதியில் நடைபெறும்.

இளையாத்தகுடி
17-3-56

ஆர். சுவாமிநாத ஐயர்
மானேஜர்

# ★ அம்பலவாணரின் ஆனந்த நடனம் ★

*சித்தாந்த பண்டித பூஷணம், திரு. ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளையவர்கள் ஸ்ரீ சங்கரநாராயண சுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ ஆறுமுகநயினார் சைவ மரபினர் மகமைப் பொதுச் சங்கத்தார் 29-12-55ல் நடத்திய திருவாதிரைப் பெருவிழாவில் பேசியது.*

தேவதேவராகிய சிவபிரானுர் ஆடிய கூத்துக்கள் சில. அவற்றுள் ஆனந்த தாண்டவம், பிரதம மகா சங்கார தாண்டவம், அனவரத தாண்டவம் என்பன இங்குப் பேசப்படும். இத்தலைப்பை அம்பலம், வாணர், ஆனந்தம், நடனம் எனப் பிரிக்கலாம்.

இச்சரீரம் சீவனுக்கே சரீரம். ஆயினும், இது பிரமபுரம்எனப்படும். பிரமபுரம்-பரமான்மாவுக்குச்சரீரம். பரமான்மா இயக்கினுலன்றிச் சீவனின் அறிவு இச்சை, செயல்கள் இயங்கா. அதுபற்றி இச்சரீரம் பிரமபுரமென உபசரிக்கப்பட்டது.

இச்சரீரத்தில் ஹ்ருத் புண்டரீக முண்டு. ஹ்ருத் புண்டரீகம்-இருதய கமலம். அது புறக்கண்ணுக்குப் புலனுகாத நுட்பமுடையது. ஆகலின் அது தகர புண்டரீகமாம். தகரம்-நுட்பம், சிறுமை. அதில் ஆகாசமிருக்கிறது. அது பஞ்சபூதத்துள் ஒன்ருகிய ஆகாசத்தைவிட நுட்பமானது. ஆகலின் அது தகராகாச மெனப்படும். பூதாகாசம் சடம். அத்தகராகாசம் ஞான மயம், சின்மயம். ஆகாசத்துக்கு அம்பரம் என்பதும் பெயர். ஆகலின் அதுவே ஞானுகாசம், சிதம்பரம் எனவும்படும். அம்பரம் அம்பலமென மருவியது. ஆகவே சித் அம்பரம் என்பன தமிழ்முடிபால் சித்தம்பரம் என்ருகிச் சிற்றம்பலம் என்ருயிற்று. தகரம் சிறுமையாகலின் தகராம்பரம் என்பது சிற்றம்பலமாயிற்றெனவுங் கொள்ளலாம். ஸ்ரீ தகராம்பரம், ஸ்ரீ சிதம்பரம் என்பன வடமொழி- அதற்குத் தமிழ் திருச்சிற்றம்பலம் என்பது.

சரீரம் பிண்டம், இவ்வுலகம் அண்டம். இவ்வண்ட பிண்டங்கள் சமம். அண்டம் விராட் புருடனெனவும் படும். விராட் புருடனுக்கு இருதயகமலமா

வது தில்லை நகர். 36 தத்துவங் களுமே பிண்டத்திலும் அண் டத்திலுமுள்ள இருதயகமலம். அதன் தலையிலிருப்பது அந்த ஞானகாசம் அல்லது சிற்றம் பலம். அவ்வம்பலம் தத்துவங் கடந்த எல்லையிலிருப்ப தென்ப தாயிற்று. 'சிதம்பரந்து ஹ்ருன் மத்யே' என்றது தரிசனோப நிஷத்து. 'மலர்மிசை' என்றது திருக்குறள். மலர்-தாமரை மலர். அது இங்கே இருதய தாமரை. மிசை-மேல். அதுஇரு தயகமலத்துக்கு மேலுள்ள அவ் வம்பலத்துக்காகி அம்பலம் என் னும் பொருளைக்கொண்டது மலர் மிசை-இருதய கமலத்தின் மேலுள்ள தகராகாசமாகிய ஞானமயமான அம்பலம்.

இனி, வாணர், வாழ்நர் என் பன ஒன்றே. சிவபிரானுக்குச் சொரூபம், தடத்தம் என நிலை கள் இரண்டு- 'உலகெலா முணர்ந்தோதற்கரியவன்' என் பது அவரது சொரூபம். 'நிலவு லாவிய நீர்மலி வேணிய' னவான் போகசிவன். 'அலகில் சோதியன்' லயசிவன். 'அம்பலத் தாடுவான்' அதிகார சிவன். போகசிவன் அருவுருவத் திரு மேனி. லயசிவன் அருவத் திரு மேனி. அதிகார சிவன் உருவத் திருமேனி. இது மகேசுரன்என வும்படும். அம்மூன்று திருமேனி களும் அவரது தடத்தம். நிலவுலாவிய நீர்மலிவேணியனு கிய சதாசிவன் அருவுருவமாகிய தன் சாதாக்கிய தத்துவத்தில் அருவுருவா யிருந்துகொண்டு தன் அருவ பாகத்தால் லயசிவ னுக் கிடமான சிவ தத்துவ சத்தி தத்துவங்களாகிய மேலுள்ள இரண்டு அருவ தத் துவங்களையும் வியாபித்து அல கில் சோதியனுகிய லயசிவனுகி, உருவபாகத்தால் அதிகார சிவ னுக்கிடமான ஈசுர தத்துவ சுத்தவித்தியா தத்துவங்களா கிய கீழுள்ள இரண்டு உருவதத் துவங்களையும் வியாபித்து அம் பலத்தாடுவானுகிய மகேசுரனுகி விளங்குகின்றுன். ஆகவே உல கெலா முணர்ந்தோதற் கரியவ ராகிய சொரூப சிவனுரின் அத் தடத்த வடிவமே மகா ருத்ர தாண்டவேசுரரென்னும் ஸ்ரீமந் நடராஜப் பெருமானு ரென்பது சித்தித்தது. மேலே காட்டியது ஹ்ருத் புண்டரீகத்தின் மஸ்த கத்திலுள்ள ஸ்ரீ தகராகாச (திருச்சிற்றம்பல)த்தில் எழுந் தருளியிருப்பவர் (வாணர்) அவரே. சொரூப சிவனுரே தடத்த நடராஜ ரென்பது கருத்து.

(தொடரும்.)

# புயலுக்குப் பின்...

மு. சிங்காரம்

'வாங்க....வாங்க.......இந்தா அப்பா வந்திடுவாரு இருங்க' என்ருள்.

,ஏன், உனக்கு அம்மா இல்லியா?' என்று கேட்டான்.

'அதை ஏங்க கேக்றீய, பாழுங் காசவியாதி எங்கஅம்மாவைக் கொண்டுபோயிறிச்சு' என்ருள்.

தனியாக இருக்கிருள் என்று தெரிந்ததும் இராமனுதனின் உள்ளம் வேகமாகத் துடித்தது. அவன் எதையோ சிந்தித்தான். சிறிதுநேரம் சென்றதும், 'ஏ புள்ளே உன் பெயரென்ன' என்று கேட்டான்.

'எம் பேரா? மீனுங்க' என்ருள்.

'நல்லபேருதான்! சரி நான் உன்னை ஒன்னு கேக்கிறேன். சொல்றியா' என்ருன்.

'நல்லாச் சொல்றேன், கேளுங்க' என்ருள்.

'என்னை உனக்குப்புடிக்குதா?

'இது என்னங்க கேள்வி' என்ருள் ஒன்றும் புரியாமல்.

'இல்லே மீனு, உன்னை எனக்குப்புடிக்குது- ஒனக்குப் புடிச்சாச் சரி' என்று குழைந்து பேசினுன்.

'அவ்வளவுதான். இதைக் கேட்டதும் மீனுவுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. குடிசைக்குள் ஓடிவிட்டாள்.

இராமனுதனும் கல்லூரிக்குப் புறப்பட்டுவிட்டான். இதுமுதல் அவர்கள் வாழ்க்கைப்புயல்திசை மாறிச் சுழலத் தொடங்கியது.

❖ ❖ ❖

தினம் தினம் இராமனுதன் அவளைச் சந்தித்தான். அவளும் சம்மதம் தந்தாள். கல்லூரியிலிருந்து வரும்போது பூவும் பலகாரமும் மறவாமல் வாங்கிவருவான் மீனுவுக்கு.

காதல் மலர்ந்தது. மலரும் பூவைச் சுவைக்கும் வண்டுகள் போல் இராமனுதனும மீனுவும் காதல் வாழ்வில் சமூகக் கட்டுப் பாடுகளையும் பிற்காலத்தையும் நினையாமல் வாழ்ந்தார்கள்.

விவரமறிந்த மீனுவின் தந்தை மகளைக்கண்டித்தான், 'ஏ குட்டி இப்பவே சொல்லிப்போட்டேன், அப்புறம் ஆப்பிட்டுக்கிட்டு முளிக்காதே. இந்தக் காலத்துப் பயக பொல்லாதவனுக. இவனோடே இனிஉன்னைப்பாத்தாக் கொன்னுடுவேன்' என்ருள்.

தந்தை சொன்னவற்றைக் காதலனிடம் சொல்லிஅழுதாள். அவள் அழுகையின் விளைவு மறைமுகச் சந்திப்பாக முடிவுற்றது.

இவ்வாண்டோடு அவனுக்குக் கல்லூரி முடிவடைகிறது. அதற் கப்புறம் வேலைதேட வேண்டும். தடைபல வரினும் மீனுவின் கைப்பிடிப்பது. அவளோடு கருத்து ஒருமித்துக் காதல் வாழ்க்கை நடத்துவது என் றெல்லாம் திட்டமிட்டிருந் தான்.

காலமும் விதியும் அவன அமனக் கோட்டையை மண் மேடாக, பாழ்பட்ட பாலைநிலமா கச் செய்துவிட்டு அவன் சாவை நோக்கிக் காத்திருந்தன.

காற்று மழை காரணமாய் மீனுவும், அவள் தந்தையும் இரவோடு இரவாய் நீரோடு இழுத் துச்செல்லப்பட்டனர்.

ஃ ஃ ஃ ஃ

சிந்தனை கலைந்தது. குட்டிச் சுவரின்மேல் வைத்திருந்த காலை எடுத்தான் இராமனுதன். தானும் உயிர்நீத்துக் கொள்வ தென்று முடிவுக்கு வந்து விட் டான்.

எண்ணம் செயலாயிற்று.பாம் பாற்று வெள்ளத்தில் மூன்று உயிர்கள் பலியாயின. வெள்ள மும் புயலும் எங்ஙனம் அமைதி யுற்றனவோ அங்ஙனமே அவர் கள் வாழ்க்கைப் புயலும் என்றென்றும் திரும்பாதபுயலாகப் பயங்கரமான அமைதியை அடைந்தது.

## திருவாவடுதுறை ஆதீன கர்த்தரின் பிறந்தநாள்விழா

திருவாவடுதுறை ஆதீன மகா சந்நிதானம்ஸ்ரீலஸ்ரீசுப்பிரமணிய தேசிக பரமாசாரியசுவாமிகளின் பிறந்தநாள் விழா 16ம் தேதி திருவிடைமருதூரில் சிறப்புடன் கொண்டாடப்பட்டது.

## நிலங்களுக்கு நட்டஈடு

புதுடில்லி, மார்ச்சு 25-1954ம் ஆண்டு நிலங்களைத் தேசீயமயமாக்கும் சட்ட 86வது பிரிவின்படி நட்டஈடு பெற மனுச்செய்துகொள்ளுமாறுகேட்டுக்கொண்டு பர்மா அரசாங்கம் முன்னறிவிப்பு விடுத்திருக்கிறது, இத்தகவலை இந்திய வெளிநாட்டு விவகாரத்துறை வெளியிட்டுள்ள பத்திரிகைக் குறிப்பு அறிவிக்கிறது. நட்டஈடு கோரிவருகிற மனுக்களை 1956-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 30ஆம் தேதிக்குள் மாவட்ட நட்டஈடு அதிகாரிகளுக்கு நிலஎழுத்துச் சான்று (ரிகார்டு) சூப்பிரண்டுகள் அனுப்பவேண்டும். 1953-54, 1954-55ம் ஆண்டுகளில் தேசீயமயமாக்கப்பட்ட பகுதிகளில் உள்ளதும், அரசாங்கம் உடைமையாக்கியுள்ளதுமான நிலங்களின் உரிமையாளர்கள் நட்டஈடு கோரி மனுக்களை அனுப்பவேண்டும். அதோடு தேசீயமயமாக்கும் சட்டத்தின் 42வதுபிரிவின் துணைப்பிரிவு (2), (3) களின்படி தேசீயமயமாக்கப்படாத தங்களுக்குச் சொந்தமான பாக்கியுள்ள நிலங்களுக்கும் இவர்கள் நட்டஈடு கோரிமனுச் செய்து கொள்ள வேண்டும்.

---

## கோவில் விளக்கிற்காக நன்கொடை

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசிஅருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் சிதம்பரத்திற்கு அண்மையிலுள்ள திருநாரையூர் ஸ்ரீ பொல்லாப்பிள்ளையார் கோவிலில் மின்சார விளக்குகள் போடுவதற்காக ரூபாய் 250 நன்கொடை வழங்கியுள்ளார்கள்.

## திருப்பணிக்கு நன்கொடை

சண்டேசுரநாயனர் ஜனனமாக சேங்கனூர் ஸ்ரீசத்திகிரீசுவரர் கோயில் திருப்பணிச்செலவிற்காக காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்750ரூபாய் நன்கொடை வழங்கியுள்ளார்கள்

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-25
மன்மத - பங்குனி-23
5-4-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## முல்லை

வினையிற் சென்று மீளுந் தலைவன் தலைவியைக் காணும் அவாவினால் தேர்ப்பாகனிடம் தேரை விரைந்து செலுத்த உவந்து கூறியது.

இலையில் பிடவ மீர்மல ரரும்பப்,புதலிவர் தளவம் பூங்கொடி தழையப்,
பொன்னெனக் கொன்றை மலர மணியெனப், பன்மலர்க் காயாங்
குறுஞ்சினை கஞலக், கார்தொடங் கின்றே காலை வல்விரைந்து, செல்க
பாகநின் றேரே யுவக்காண், கழிப்பெயர் களரிற் போகிய மடமான்,
விழிக்கட் பேதையோ டினனிரிந் தோடக், காமர் நெஞ்சமோ டகலாத்,
தேடூஉ நின்ற விரலை யேறே.242 :-விழிக்கட்பேதைப்பெருங்கண்ணனார்

பாகனே! பழுத்து உதிர்தலால் இலையில்லாத பிடவு மெல்லிய மலர்கள் நிறையும்படி அரும்பு முகிழ்ப்பப் புதலிலேறிப் படர்கின்ற முல்லைக்கொடியில் பூக்கள் மலர, கொன்றைகள் பொன்போல மலர்தலைச் செய்ய நீலமணிபோலப் பல மலர்களையுடைய காயாவின் குறிய கிளைகள் விளங்க, இன்று காலைப்பொழுதிலேயே மேகம் மழைபொழியத் தொடங்கியது. கழிந்து பெயர்கின்ற களர் நிலத்திலே சென்ற பிணைமான் மருண்டு விழிக்கின்ற குட்டியோடு கூட்டத்திலிருந்து இரிந்தோடவும் அதன்பால் வைத்த விருப்பத்தோடு சென்று அதனைத் தேடுகின்ற கலைமானை உவ்விடத்தே பார்ப்பாயாக.

:-பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

ஆதி பகவன் றனதூட றணிப்பான் பணிய வவ்விறைவன்
பாத மிறைஞ்சு மதற்குநெற்றிப் பகையு மல்குற் பகையுமாஞ்
சீத மதியு மரவும்விழுஞ் சேயற்கு முவகை சேயாமலலை
மாது பணியு மதற்குமன மகிழு முமையை வணங்குவாம்.

:-பிரபுலிங்கலீலை 2

உரை:-'ஆதி பகவன் - ஆதி பகவனாகிய ஆண்டவன், தனது-தன்னிடத்து உண்டாகிய, ஊடல்-பிணக்கை, தணிப்பான் — தணிக்கும் பொருட்டு, பணிய-வணங்க, அவ்விறைவன்- அந்த முழுமுதற் பொருளாகிய ஆண்டவன், பாதம் - தன்னுடைய பாதங்களிலே, இறைஞ்சும் அதற்கும் - வணங்குகின்ற செயலுக்காகவும், நெற்றிப்பகையும்-தனது நெற்றியினாலே பகைக்கப்பட்டதும், அல்குற் பகையும் ஆம் - அல்குலாலே பகைக்கப்பட்டதுமாகிய, சீத மதியும்-குளிர்ந்த பிறைத் திங்களும், அரவும்-பாம்பும், விழும் செயற்கும்-வணங்குகின்ற செயலுக்காகவும், உவகை செயாமல்- மகிழ்ச்சியைச் செய்யாமல். அலை மாது-தனது மாற்றாளாகிய கங்கைநங்கை, பணியுமதற்கு -வணங்குகின்ற செயலொன்றிற்காகமட்டும், மனம்மகிழும்-மனம் மகிழுகின்ற, உமையை - உமாதேவியை, வணங்குவாம்- -வணங்குவோமாக' என்பதாகும்.

கற்பனைக் களஞ்சியமாகிய சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய நூல்கள் பலவற்றுள், பிரபுலிங்கலீலையும் ஒன்று. இது, துதி கதிமுதல் மான்மிய கதி வரை இருபத்தைந்து பிரிவுகளைக்கொண்டு, 1157 பாடல்களை யுடையதாய் விளங்குகின்றது. இதிலுள்ள பாடல்கள் ஒவ்வொன்றும் சொற்சுவைபொருட்

## கட்டண உயர்வுகள்

புதுடில்லி மார்ச் 31-

அஞ்சல் தந்தித் துறைத் தலைமை நிருவாகி (டைரக்டர் சென்ரல்) இன்று அளித்த ஒரு பத்திரிகைக்குறிப்பில் 1956 ஏப்ரல் முதல் தேதியிலிருந்துசெய்திப் பத்திரிகைகளுக்காக அனுப்பப்படும் தந்திகள் தவிர மற்ற உள்நாட்டுத் தந்திகளின் கட்டணங்கள் கூடுதலாகும் என்றும் அஞ்சற்பதிவு (ரிஜிஸ்ட்ரேஷன்) கட்டணம்ஒரு பொருளுக்கு 6அணுவிலிருந்து 8அணுவாக உயர்த்தப்பட்டிருக்கிறது- என்றும் தெரிவித்தார் ஏப்ரல் 1ந் தேதிமுதல்இதுநடைமுறைக்கு வரும்.

மேல்விவரம் வருமாறு:- உள்நாடு, வெளிநாடு எதற்கும் இப்பதிவுக் கட்டணஉயர்வு செல்லும். அதே தேதியிலிருந்து 'பதிவுஉறை' (ரிஜிஸ்ட்ரேஷன் என்வலப்) பின் விலை ஒன்பதரை அணுவிலிருந்து பதினொன்றரை அணுவாக ஆகும். இதில் 'உறையின்' விலை இரண்டணுவும் மற்ற செலவுகளுக்கான (ஸ்டேஷனரி) ஒன்றரை அணுவும் அடங்கும்.

சாதாரணத் தந்திகளின் புது அடிப்படைக்கட்டணம் முதல் 8வார்த்தைகளுக்கும் அதற்குக் குறைவான வார்த்தைகளுக்கும் (விலாஸம் உள்பட) 9 அணுவாகும். 8வார்த்தைகளுக்கு அதிகமாகும் ஒவ்வொரு வார்த்தைக்கும் இக்கட்டணத்தில் ஒருஅணு கூடும்.

அவசரத் தந்தியின் புது அடிப்படைக்கட்டணம் முதல் எட்டு வார்த்தைகளுக்கும் அதற்குக் குறைவான வார்த்தைகளுக்கும் (விலாசம் உள்பட) 1-2-0ரூ ஆகும்.8வார்த்தைகளுக்குஅதிகமாகும் ஒவ்வொருவார்த்தைக்கும் 2அணுகூடும். மேற்கண்ட அடிப்படைக் கட்டணங்களுடன் ஒவ்வொரு சாதாரணத் தந்திக்கும் 4உபரிக்சட்டணமும் ஒவ்வொரு அவசரத் தந்திக்கும் 8 அணு உபரிக்கட்டணமும் தொடர்ந்து வசூலிக்கப்படும் என்றும் மேற்கண்ட பத்திரிகைக்குறிப்புக் கூறுகிறது.

---

# ★ அம்பல வாணரின் ஆனந்த நடனம் ★

(முன்தொடர்ச்சி)

சிதம்பரங் கோயிலில் சிதம்பர ரகசியம் என்று சொல்லப் படுகிற இடத்தில் வணங்கப்படுபவர் சொரூப சிவனார். அவரையடுத்து எழுந்தருளி யிருக்கும் நடராஜர் தடஸ்த சிவனார் அக் கோவிலில் மாத்திரம் சிவபிரானார் அவ்விரு நிலைகளிலும் வைத்து வணங்கப்படுகிறார். மற்றைத் தலங்களிலெல்லாம் தடஸ்த சிவனார் மாத்திரம் எழுந்தருளுவர். 'அத யதிதமஸ்மித் ப்ரஹ்ம புரே தஹராம் புண்டரீகம் வேச்ம தஹரோஸ்மிந் நந்தராகாசஸ் தஸ்மிந்ய தந்தஸ்ததந் வேஷ்டவ்யம் தத்வா வவி ஜிஜ்ஞாஸி தவ்யம்' (பிரமபுரத்திலுள்ள தஹர புண்டரீகத்தில் தகராகாச மிருக்கிறது. அதற்குள்ளிருப்பதை யறியவேண்டும்) என்றது சாந்தோக்யோப நிஷத்து 'சம்புராகாச மத்யே த்யேய:' (சம்புவை ஆகாச மத்தியில் தியானிக்க) என்றது அதர்வ சிகோபநிஷத்து. திருக்குறள் அந்நடராஜரையே ஏகினன் என்றது. ஆகவே, 'மலர்மிசை யேகினார்' அம்பலவாணரே யென்க.

அவரது அருட்சக்தியே அந்த ஞானாகாசம். அதில் அவ்வருளையே திருமேனியாகவுங் கொண்டு அவர் நடனம் புரிகிறார். அச்சக்தியே ஸ்ரீஉமாதேவியார். அவருக்குக் ககனம் என்பதும் பெயர். 'ககநாபிதாநா' என அவரைக் குறித்துக் கூறிய து வாயுசங்கிதை. 'ஆகாச சரீரம் ப்ரஹ்ம' என்ற சுருதியும், 'சக்திச் சரீரம்' என்ற அப்பாஸ்து தியுங் காண்க ருக்வேதம் நடராஜரை 'பரதர்' என்ற மந்திரத்தால் துதித்தது.

பதஞ்சலி வியாக்கிரபாதர் என்பவருக்கு ஆடிக் காட்டிய நடனம் ஆனந்த நடனம். சர்வ பிரபஞ்சத்தையும் சம்ஹாரம் செய்து தாம் மாத்திரமாய்நின்று தம் நித்தியத்துவத்தை விளக்கிக்கொண்டு அவர் ஆடுகின்ற ஆட்டம் மஹா சம்ஹார தாண்டவம். அவர் எப்போதும் புரிகிற நடனம் அனவரத தாண்டவம்.

அவர் எல்லாச் சித்துப் பொருள்களிலும், சடப்பொருள்களிலும் அத்துவிதமாய்க் கலந்து, வியாபித்திருக்கிறார்.

லோரார்' என்பது சிவஞான சித்தியார்.

தலைவன் - தலைவியருள்ளே ஊடல் நிகழ்ந்த வழியின்றிக் கூடல் முற்றிய சுவையை அளிக்காது. இதனை 'ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங், கூடி முயங்கப் பெறின்' என்ற திருக்குறள் அறிவிக்கின்றது. அகப்பொருள் நூல்களில் தலைவன் தலைவியரிடையே ஊடல் நிகழ்வது, தலைவனின் பரத்தைப் புணர்ச்சி காரணமாகவே என்று கூறப்பெற்றுள்ளது. அறநூலாகிய திருக்குறள் 'இல்லை தவறவர்க் காயினு மூடுதல், வல்ல தவரளிக்கு மாறு' என்று கூறிக் கூடலின்பஞ் சிறத் தற்காகவே ஊடல் நிகழுமென்று அறிவுறுத்துகின்றது,

உமாதேவியும் கங்காதேவியுமாகிய இருமனைவியரையுடைய இறைவன், முன்னவளுக்குஉடம்பிற் பாதியையும் பின்னவளுக்குச் சடையையும் தங்குமிடங்களாகக் கொடுத்தான். உடம்பிற் பாதியைப் பெற்ற உமையம்மை, தனக்களித்ததினும் தலையிடத்தை மாற்றாளுக்கு அளித்தது பற்றிப் பிணக்கங் கொண்டாள் அவளை எப்படி-எப்போது அடிப்படுத்தலாமென்று சந்தர்ப்பத்தையும் வேளையையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

எதிர்பாராதவிதமாக ஒரு நாளில் இருவருக்கும் சிறிது ஊடல் ஏற்பட்டது. 'மனைவி உயர்வும் கிழவோன் பணிவும் நினையுங் காலைப் புலவியு ளுரிய' என்பது தொல்காப்பியம். 'பணியாயென வள்ளி பதம்பணியுந், தணியா வதிமோக தயாபரனே' என்பார் அருணகிரிநாதர்.

,ஊடலில் தோற்றவர் வென்றார்' என்னுந் திருக்குறளுண்மைப்படி அம்மையின் ஊடலைத் தவிர்த்துத் தான் வெற்றியடையக் கருதிய ஆண்டவன், பெருமாட்டியினது திருவடிகளில் வணங்கினன். அவன் வணங்கும் பொழுது அவன் சடையிலிருந்து பிறைத்திங்களும் பாம்பும் கங்கை நங்கையும் கீழேவிழுந்து தானே ஆகவேண்டும்?

யாராலும் வணங்கப்பெறுகின்ற இறைவன் தன்னை வணங்கியபொழுதுவேறெதற்கும் மகிழாமல், வெகு நாளாக எதிர்பார்த்திருந்த மாற்றாள் வணக்கம் நிகழ்ந்தது குறித்து மட்டும் மகிழ்ந்து அதனால் ஊடலுணர்ந்துஉளமகிழ்ந்தாள் உமையம்மை என்றஆசிரியரது சொல்லோவிய அழகை அநுபவிக்கப் பிறந்த நம்பேறு பெரிய பேறல்லவா?

---

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

இப்போது அவர் பச்சாத்தாபப்படுபவர்போலுந் தெரிகிறது. 'அறிவு என்பது நெருப்பைப் போன்றது. அதனால் நன்மையும் பெறலாம் தீமையையும் பெறலாம்' (1-9-55 தமிழ்நாடு) என்கிறார் இரா-நெடுஞ்செழியன். அறிவின் விளைவைக் கொண்டுதான் அறிவின் தரத்தை மதிக்க வேண்டும். ஈ-வே-ராவுக்கும் அவர்தோழன்மாருக்கும் சைவநிந்தை பாற்சோறு. அத் தீமையைத்தான் அவர் பெற்றார், பிரசங்கித்தார். அவருக்கு நல்ல புத்தி வேண்டும். அதை ஊட்டுந் திறமை அவ் விளம்பர சைவருக் கில்லை. அவ்விராவை குருசோவென்று அச் சைவர் புகழ்ந்துவிட்டார். அவரறிவுத் திறமை அதற்கே உதவுகிறது.

அச்சம்பந்தியாரே சைவத் தலைவர், அவர்கீர்த்தியேகீர்த்தி. அதை யெடுத்துப் பேசுவதே அச்சமய வளர்ச்சியில் ஆர்வமுடையார்க்குக் கடன், அழகுமாம். அந்நிய தேச, சமயத்தவருள்ளங்களிலும் புக்கழுந்துமாறு அது பேசப்பட வேண்டும். அவ்வகையில் இல்லது கூறற் கவசியமில்லை. அத்தலைவரின் பொருள்சேர் புகழே மட்டுக்கு மிஞ்சியது. அதைக் கண்டு கூறுந் திறமையிருப்பது போதும். அப்பிரசாரமே சைவத்தை வளர்க்கும். ஆனால் அவ்விளம்பர சைவர் 'நாயகத்தைப்போல ஒருவர் உலகில் தோன்றியதே கிடையாது' (10-11-55 தமிழ்நாடு) எனக் கூறி நபியைப் புகழ்கிறார். நபியைப் பற்றி அவ்வளவு தெரிந்தவர் இசுலாமிய சமய நூல்களில் தேர்ந்த ஆராய்ச்சியுடையவராகத்தா னிருப்பர். அவர் அந்நிய சமயத்தாராயின் அதை விட்டு அவ்விசுலாத்திற் புக வேறும் ஆராய்ச்சி வேண்டாம். அங்ஙனமாக அச்சைவர் இன்னும் இசுலாமிய ராகத்தானிருக்கிறார். அதன் காரணத்தை இசுலாமியரே அவர்பாற்கேட்டு வெளியிடல் நலமாகும். 'சமய மேடைகளில் பிறர் பாராட்டுக்காகப் பொய்ப்பிரசாரம் அறவே கூடாது' (11-8-55 தமிழ்நாடு)

என்கிறுர் அச்சைவர். அச் சம யத்திற் சேரும் வரை அவர் செய்கிற சைவப் பிரசாரமெல் லாம் அத்தகைய பொய்ப்பிரசார மேயாம். 'தமிழர்களும் பிற மதத்தினரும் இசுலாம் மார்க் கத்தை நன்கு கற்றல் வேண்டும்' (7-11-55 தமிழ்நாடு) என்ற தும் அவருபதேசமே- இப்படிச் சைவத்தலைவரை விட்டு அந்நிய சமயத் தலைவரைப் புகழ்வதும், சைவசமயத்தை விட்டு அந்நிய சமயங்களை யாதரிப்பதுமேஅவர் பிரசாரமா யிருந்து வருகிறது. அவரா சைவத்தை வளர்க்குஞ் சைவர்? சைவம் செத்துக் கொண்டிருக்கிறதென அவர் துயரப்படுவது மாமி செத்தால் மருமகள் கண்ணீர் வடிப்பதும், ஒப்பாரி வைப்பதும் போன்றதே.

சத்தெல்லாம் பொருளில்தா னிருக்கிறது. பெயரிலில்லை; பெயர் எப்படி மாறினும் பொருள்கெடாது என்ற கருத் துள்ளது ஓர் ஆங்கில வசனம். பெயருக்கும் முக்கியத்துவ முண்டு என்பவரை நவீனர் அவ் வாக்கியத்தைக் காட்டிக் கண் டிப்பர். ஆனல் சமீபத்தில் அவ ருக்கோராசை பிறந்தது. சென்னை ராஜ்யத்துக்குத் தமிழ் நாடு எனப் பெயரிடவேண்டு மென்பது அது- அதனல் 'பெய ரில்தான் பண்பும், வலிமையும், சிறப்பும் ஒருங்கே பொதிந்துள் ளன என்பதற்கு வரலாறு பல சான்றுகளைக் காட்டுகின்றது' (11-10-55 தமிழ்நாடு) என்கிரு ரவர். பொருள்போல் பெயரும் முக்கியம் என்பது இப்போது அவரறிவிற் பட்டது. அன்றி யும் அவர் 'இசுலாம் என்ற அராபிச் சொல் சாந்தி அல்லது அமைதி என்ற பொருள்கொண் டது' (29-10-55 தமிழ்நாடு) எனக் கூறினராயினும் அச் சமயத்தைச் சாந்திசமயம்,அமை திச்சமயம் என்று சொல்லாமல் இசுலாம்சமயம் என்றே பெயர் சொன்னர். 'அல்லா என்ற சொல் ஆண்டவரைக்குறிக்கும்' என்று பொருள் கூறிய அவர் ஆண்டவர் ஒருவரைத்தவிர வேறு தெய்வம் இல்லை என்று மல் அல்லா ஒருவரைத்தவிர வேறுதெய்வம் இல்லை என அல்லா என்கிற அரபுப் பெய ரையே சொன்னர். அந்நிய சம யங்களின்மேல் அவர் கொண்ட ஜாக்கிரதையும் அளப்பரியன. ஆனல் சைவசமய விஷயத்தி லும், சிவபிரான் விஷயத்திலும் அவருக்கு நாம வரம்பே கிடை யாது. அவருக்கு வாயில்வந்தன வெல்லாம் சைவத்தின்பெயர்கள் சிவபிரானின் பெயர்கள்.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

மன்மத பங்குனி-23

# பெயருக்கே ஆபத்தா?

சென்னை மாகாணத்தின் பெயரைத் தமிழ்நாடு என மாற்றியமைக்க வேண்டுமென்றுசென்னைச் சட்டசபையில் கொண்டு வரப்பெற்ற தீர்மானம். தோல்வியடைந்து விட்டது. இது, தமிழ்நாட்டு வரலாற்றிலேயே வியப்பானதோரு நிகழ்ச்சி மட்டுமன்று; இன்றைய தமிழர்களின் தன்மானமற்ற இழிதகவைக்காட்டுகின்ற நிகழ்ச்சியுமாகும்.

இந்தத் தீர்மானத்தைக்கோண்டு வந்தவர் திரு, கே. விநாயகம் அவர்கள். அவரை ஆதரித்தவர் இருபத்தறுவரும் எதிர்த்தவர் அறுபத்தேழுவருமென்று தெரிகிறது. மக்களாட்சி யென்று அனைவரும் பாராட்டுகின்ற இந்தியப்போரசின் ஆட்சிமுறையை உண்மையில் எந்த ஆட்சிமுறையென்று நாம் தேரிந்துகோள்ள முடியவில்லை, சனநாயகஆட்சி என்ற போர்வையில் ஒளிந்துகோண்டிருக்கும் சர்வாதிகார ஆட்சியேன்று அதனைச் சோல்வதுகூடஒருவாறுபோருந்தும்

நாடு அன்னியராட்சியிலிருந்து விடுதலைபெற்ற பிறகு மக்கள் அநுபவித்து வரும் நன்மை தீமைகளைத் தனித்திருந்து சிந்தித்துப்

பார்க்கவேண்டும். மொழி வாரி மாகாணக் கொள்கையை ஒரு நாளில் வற்புறுத்தித் தனக்குரிய பிரிவை அம்மொழிவாரியாக அமைத்துக்கொண்ட காங்கிரசு, ஆளுங்கட்சியானவுடன் அம்மொழி வாரிப்பிரிவை ஒரேயடியாகப் புறக் கணித்தது.

அதோடு, மற்றை மாகாணங்க ளிற் சேர்ந்திருந்த தமிழ்நிலப்பகுதி யைச் சென்னை மாகாணத்தோடு சேர்க்க மறுத்தது. போதாக்குறைக் குத் தமிழ்நாடு என்ற பெயரே நம் நாட்டிற்கு எந்த நாளிலும் இல்லை யென்று துணிந்து சொல்லவும் தொடங்கி விட்டது.

ஆட்சிப்பீடத்திலிருந்தால் எதைப்பற்றியும் எப்படிவேண்டு மானாலும் பேசலாம் போலும்! சிலநாட்களுக்குமுன் மத்திய அரசி யலில் இடம்பெற்றுள்ள தமிழ் நாட்டிற் பிறந்த அமைச்சரொருவர் தமிழெழுத்துச் சீர்திருத்தம் பற்றி டில்லித் திங்களிதழொன்றில் அறி வுடையவ ரொப்பாத சில கருத் துக்களை வெளியிட்டிருந்தார்.

இப்போது நமது சென்னை மாநில அமைச்சரொருவர் தமிழர் களே இடம்பெற்றுள்ள சட்ட சபைக் கூட்டத்தில் 'தமிழ்நாடு என்ற பெயர் வரலாற்றிலேயே கிடையாது' என்று முழங்கியிருக் கிறார். ஐயோ! தமிழ்நாடே நீ பெற்ற அருமைப் புதல்வரொருவரே உனது உண்மைப் பெயரை வாயாற்சொல் லக் கூசுகிறாரென்றால் உனது பாவத்திற்கு அளவேது?

இன்றைக்கிருக்கிற தமிழ்நூல்க ளில் பழமையானது தொல்காப்பி யம். அணிமையிலிருந்த பெருங் கவி சுப்பிரமணியபாரதி. தொல் காப்பியம் 'வடவேங்கடம் தென் குமரி யாயிடைத் தமிழ்கூறு நல் லுலகம்' என்றும் 'பாரதி' கல்வி சிறந்த தமிழ்நாடு' என்றும் குறிப் பதை அமைச்சர் அறியார்போலும்! தமிழ்நாடு என்றசொல்லையே கண்டு வெருளுகின்ற ஆட்சியில் 'தமிழ் நாடு' என்ற பொருளைப் பற்றிக் கனவுதான் காண வேண்டுமே யன்றி வேறென்ன பயனை அடைய முடியும்?

---

## இலக்குமிபுரம்

சொக்கலிங்க வித்தியாசாலே யில் 27-3-56 மாலே கவிச்சக்கர வர்த்தி கம்பர்விழா இலக்குமி புரம் அஞ்சல் நிலேயத் தலேவர் திரு ஆர் சீனிவாசராவ் அவர் கள் தலேமையில் நடைபெற்றது. இறைவணக்கத்திற்குப்பின் கம் பன் கவிநலம் பற்றித் த லே வ ர் அவர்களும் கம்பன் வ ர ல ா று பற்றி வித்தியாசாலே உதவி ஆசி ரியர் ஆர் சுவாமிநாதய்யர் அவர் களும் வி ரி வாகப்பேசினர்கள். மாணவ ம ா ண வி கள் பாட்டு பேச்சு, கு ம் மி, கோலாட்டம் நடைபெற்றன. தலேவர் முடிவு ரைக்குப்பின் வி த் தி ய ா சாலே உதவி ஆசிரியர் ஆர் சுவாமிநா தய்யர் நன்றிகூற நாட்டு வாழ்த் துடன் விழா இனிதுநிறைவெய் தியது.

## பதவி நியமனம்

இராமநாதபுரம், ஏப் 2-

சென்றஈராண்டுகளாக இராம நாதபுரம் தாசில்தாராக இருந்து புயல், வெள்ள நிவாரண வேலே களில் திறம்படச் சேவைசெய்து அனேவருடைய அ ன் பை யும் கவர்ந்துவந்த திரு எஸ் நாரா யணரெட்டியார் பி ஏ, கமுதி சமுதாய நலத்திட்ட அ தி காரி யாக நி ய மிக்கப்பட்டிருக்கிருர். இம்மாவட்டத்தில் கமுதி, தேவ கோட்டை திருவாடானே காளே யார்கோவில் ஆக 4 சென்டர்க ளில் 1-4-56 முதல் ச மு த ா ய நலத்திட்டம் அ மு ல் நடத்தப் படுமென அறிவிக்கப்படுகிறது.

இதுவரை து ணே த் தாசில் தாராயிருந்த திரு அந்தோணி, திருவாடானேதாசில்தாராகமாற் றப்பட்டிருக்கிருர்.

## இந்துக்களானர்கள்

மதுரை ஏப் 1

மதுரைநகர் வை த் தியநாத புரத்திலிருக்கும் ச ா மு வேல், ஞானசுந்தரி, கர்த்தர், வி சு வ ா சம், சீனிவாசன், டேவிட், பாக் கியம் என்ற கி றி த் த வ ர் கள் இன்று திருஞானசம்பந்தசுவாமி கள் ஆதீனம் இளவரசு ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரதேசிக பரமாசாரிய சுவாமிகளிடம் இந்து முறைப் படி தீட்சைபெற்று இந்துவாகி முறையேவேல்முருகன், அன்னம் மாள், சுப்பிரமணியம், வைத்திய நாதன், சீனிவாசன், கந்தசாமி, பாக்கியவேலு என்றபெயர்களேப் பெற்ருர்கள்.

## கம்பர் விழா

'நமக்குள்ளே பழம் பெருமைகள் பேசுவதிலோர் பயனில்லை' என்று பாரதி கூறினார். ஒப்பற்ற காவியமான கம்பராமாயணத்தை இதர மொழியினரும் அறிந்துகொள்ள வேண்டியே இந்த ராமாயண உரைக்கோவை ஏற்பாடு செய்யப்பட்டது.என்று கல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கத்தில் 24-3-56ல் நடைபெற்ற கம்பர் விழாவில் ஸ்ரீ ஓ சு வே மணியம் அனைவரையும் வரவேற்றுப் பேசினார்.

வங்கப்பிரமுகர் ஸ்ரீ நரேந்திர தேவ் ஆரம்பஉரையை நிகழ்த்துகையில் கலாசாரஒற்றுமைக்கு இதுபோன்ற உரைக்கோவைகள் பெரிதும் துணை புரியுமென்றும் சங்கம் எடுத்துக்கொண்ட இம் முயற்சி பாராட்டத் தக்கதுஎன்றும் வங்கமொழியில் உள்ள 'கிர்த்திவாஸர்' ராமாயணத்தைப் பற்றிப் பேசினார்.

துளசிதாஸருடைய ராமாயணச் சிறப்புக்களைப்பற்றிக் கூறுகையில் வங்கத்தின் பிரபல வழக்கறிஞர் ஸ்ரீ கே பி கெய்த்தான் கம்பனுக்குப்பின் வந்த துளசிதாஸருக்கு கம்பனின் காவியம் ஓர் வழிகாட்டி யாக இருந்தது என்று துளசிதாஸ் ராமாயணத்திலுள்ள பல தத்துவங்களை எடுத்துக்கூறினார்.

ஆதி கவி வான்மீகி ராமாயணத்தைப்பற்றித் தேசிய உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரி விரிவாகப் பேசியபின், கம்பனைப் பற்றி ஸ்ரீ ஓ சு வே மணியம் கம்பனின் காவிய ரஸனையையும் அதன் சிறப்புக்களையும் சுவைபட எடுத்துக்கூறினார்.

26-3-56 2வதுநாள் நிகழ்ச்சியில் 'கம்பனும் தமிழும்' என்ற தலைப்பில் ஸ்ரீ கே வி சுந்தரம் 'சொல் புரட்சியில் கம்பன்'-ஸ்ரீ ரெங்கராஜன்; 'வஞ்சமகள்'-ஸ்ரீ சிவ ஜம்புநாதன், 'கம்பன் வளர்த்த பண்பில்' ஸ்ரீ இராசங்கர், 'தருமத்தம்பி' ஸ்ரீ எஸ். வெங்குஸ்வாமி, 'அவள்' ஸ்ரீ ஆ சு கிருஷ்ணன், 'கம்பனின் கவிதா மேதை' ஸ்ரீ ந சிங்காரம் ஆகியோர் பேசினார்கள்.

ஸ்ரீ. டி பி. சித்தலிங்கய்யா பேசுகையில் பண்பு என்பது தனிமனிதன் மேற்கொள்ளும் வாழ்க்கைநெறி என்றும், பண்பாடு என்பது ஓர் சமுதாயம்

கொள்ளும் வாழ்க்கைமுறை என்றும் இவையிரண்டையும் கம்பன் தன் சமுதாயத்தில் நன்கு வெளிப்படுத்துகிறான், ஆதி கவியின் காவியத்தைப் பல இடங்களிலே மாற்றித் தமிழர் பண்பாட்டுக்கு உகந்த முறையிலே நமக்குத் தந்துள்ளான் என்றும் குறிப்பிட்டார்.

செயலாளர் ஸ்ரீ எஸ் குப்புஸ்வாமி நன்றி கூறினர்.

## உங்களுக்குத் தெரியுமா?

கொச்சி துறைமுக அபிவிருத்திக்கு 360.80லட்சரூபாய் செலவாகக்கூடிய திட்டங்களும், ஆலப்புழை துறைமுக அபிவிருத்திக்கு 7 லட்ச ரூபாய் செலவாகக்கூடிய திட்டங்களும் இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப்படவிருக்கிறது.

இந்தியாவில் 1951-52ம் ஆண்டில் மொத்தம் 3617 லட்சம்டன் கோதுமை இறக்குமதி செய்யப்பட்டது. 1955-56ம் ஆண்டில் இறக்குமதி 326 லட்சம் டன்னுக்குக் குறைந்துவிட்டது.

இந்தியாவில் பிரதி மாதம் மொத்தம் சுமார் 1.45 கோடி க்ஷவர பிளேடுகள் உற்பத்தி செய்யப்படுகின்றன.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் 5,000 கிராம சேவிகைகளுக்குப் பயிற்சி அளிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் இந்தியக்கப்பல் போக்குவரத்துக் கம்பெனிகள், வெளிநாடுகளில் மொத்தம் சுமார் 1,10,000 டன் நிறையுள்ள 17 கப்பல்களைக் கட்டுவதற்கு ஆர்டர்கள் கொடுத்தன; அவற்றில் மொத்தம் 33,500டன் நிறையுள்ள ஐந்து கப்பல்கள் ஏற்கனவே டெலிவரியாகியுள்ளன.

இந்தியாவில் அச்சுமை உற்பத்தி 1954ல் 1,675 டன்னாக இருந்தது 1955ல் 2,090 டன்னாகப்பெருகிவிட்டது.

இந்திய சர்க்கார் குறைந்த வருமானத்தினருக்கான ஜாகை வசதித் திட்டத்தின் கீழ் பல்வேறு ராஜ்யங்களுக்கு 1956ஜனவரிவரை கடனுதவியாக மொத்தம் சுமார் 21.28கோடி ரூபாய் வழங்கியுள்ளார்கள்.

சுவை மிக்க சிறப்புடன் அமைந்துள்ளது.

சான்றோருடைத்தென்று பாராட்டப்பெறுகின்ற தொண்டைநாட்டில் கல்லெல்லாம் சிவலிங்கமாயிருக்கின்ற கச்சிப்பெரும்பதியில் குமாரசுவாமி ஐயரென்பவரின் மூத்த புதல்வராகச் சிவப்பிரகாச சுவாமிகள் தோன்றினார்கள். இவரது உடன்பிறந்தார், வேலைய சுவாமிகளும் கருணைப்பிரகாச சுவாமிகளும் ஞானம்பிகையம்மையாருமாவார்.

குமாரசுவாமிஐயர் சிவலிங்க தாரணம் செய்துகொண்டது. திருவண்ணாமலை தெற்கு வீதி குருதேவரிடமென்று தெரிகின்றது. சிவப்பிரகாச சுவாமிகளுக்கு மிகஇளமைப் பருவத்திலேயே செய்யுள்யாக்கும் ஆற்றல் அமைந்திருந்தது. இதனை இவரியற்றிய சோணசைலமாலையால் அறியலாம்.

இவர் காலத்தில் இலக்கணம் இலக்கியம் தருக்கம் சாத்திர முதலியவற்றில் வல்லவராயிருந்தவர், குமரகுருபர சுவாமிகள் மாணவராகிய தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த வெள்ளியம்பலவாண முனிவர். இவரிருந்தது திருநெல்வேலித்தாமிரபர்ணியாற்றங்கரையிலுள்ள சிந்துபூந் துறைத் திருமடத்திலாகும்.

இயற்கையாகவே தீஞ் சுவை மிக்க செந்தமிழ்ப் பாடல்களையாக்கும் திறமைபெற்றிருந்த சிவப்பிரகாச சுவாமிகள், முறையாக இலக்கண இலக்கிய நூல்களைப் பாடங் கேட்டல் வேண்டுமென விரும்பித், தமது தம்பியரோடு திருநெல்வேலிக்கு வந்து வெள்ளியம்பலவாண முனிவரிடம் ஐந்திலக்கணங்களையும் ஓதியுணர்ந்தார். குருதெட்சணையாக ஆசிரியப்பெருமான் வேண்டியபடி, திருச்செந்தூரிலிருந்தபோலிப்புலவரொருவரை 'திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதி' என்னுமொரு நூல்பாடி வென்று ஆசிரியரின் அடிப்படுத்தினரென்றும் கூறுவர்.

சிவப்பிரகாச சுவாமிகள் ஞானோபதேசம்பெற்றுக் கொண்டது, பொம்மைய பாளையத்திலிருந்த சிவஞான பாலய தேசிக மூர்த்திகளிடமாகும். லிங்காங்கப் பேறுடைய வீர சைவஞானியாக விளங்கிய சுவாமிகள் தமது இஷ்டலிங்கப் பெருமானிடத்தும், தமக்கு ஞானோப

தேசஞ்செய்த குருமூர்த்திகளிடத்தும், அளவுகடந்த அன்பு கொண்டு வாழ்ந்தார்களென்பதை, அவர்களது திருவாக்கினால் அறிகிறோம்.

துதிகதியின் முதற் பாடல் சிவபெருமானைப்பற்றியது அதில், தமக்குச் சிவபெருமான் அருள் செய்யும் பொருட்டுத் தானே உவந்து கைத்தலத் தெழுந்தருளினாரென்று ஆசிரியர் கூறும் உண்மை, நினைவிலிருத்தத் தக்கதாகும். 'தானேயுவந்தெங் கரதலத்தின், மேவாவமர்ந்த மாமணியைத் தொழுது வினைக்கு விடை கொடுப்பாம்' என்பது அது.

துதிகதியின் இரண்டாவது பாடலாகிய மேற்கண்ட செய்யுள், உமாதேவியின் துதியாய் அமைந்ததாகும். பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் உயிர்களை உய்யக்கொள்ளும் பொருட்டாக மேற்கொள்ளுகின்ற வடிவங்கள்மூன்று. அவை அருவமும் அருவுருவமும் உருவமுமென்று சொல்லப்பெறும். இவற்றினிடமாக இருக்கின்ற பெருமானை முறையே இலயசிவனென்றும் போகசிவனென்றும் அதிகாரசிவனென்றும் கூறுவர்.

உருவமாகிய உடம்பைப் பெற்றுவாழுகின்ற உயிர்களுக்கு அவ்வுருவத்தை மேற்கொண்ட நிலையில் ஆண்டவன் அருள் செய்கின்றபொழுது, அவ்வருட் பேறு எளிமையானதாக வந்து சேருகின்றது. இதனாலேயே ஆண்டவனது உருவத் திருமேனி பலவகைப்பட்ட நிலையில் அமைந்திருக்கின்றதென்பதும் உணரத்தக்கதாகும்.

இறைவன் உருவத்திருமேனியை மேற்கொள்ளுகின்ற பொழுது, அவன் ஆண்பாலாகவும் அவனது சத்தி பெண்பாலாகவும் அமைய விளங்குவான். இவ்விருப்பாற்பட்ட தன்மையின்றி உலகஇயக்கம் இல்லையாதலின், அவ்வியக்கத்திற்குஅடிப்படையாயிருக்கின்ற ஆண்டவன் இருபாற்பட்ட திருமேனி கொள்ளுதல் ஏற்புடையதேயல்லவா? வலப்பாகம் செழும்பவளச் சோதியென்ன மற்றைப் பாகம் வாணீலச் சோதியென்ன விளங்குகின்ற சிவசத்திகளின் கூடல்-ஊடல்களை அடிப்படையாகக் கொண்டே உலகத்துயிர்களின் கூடல்-ஊடல்கள் நிகழுகின்றன என்று ஞான சாத்திரங்கள் கூறுகின்றன போகியாயிருந்துயிர்க்குப்போகத்தை புரித

அவர் அசைத்தாலன்றிச் சடப் பொருள்கள் அசைதலும், அறி வித்தாலன்றிச் சித்துப்பொருள் (உயிர்)கள் அறிதலும் இல்லை. எல்லாவற்றையும் இயக்குபவர் அவரே. அந்த இயக்குதற் றொழிலே அனவரத தாண்டவம். அத்தொழில் பலவாய் விரியும்; ஆயினும் ஐந்தா யடங்கும். ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்என்பனவே அவ்வைந்து. ஆகலின் அவரே பஞ்சகிருத்திய கர்த்தா. அவர் உடுக்கை யேந்திய திருக்கரம் ஆக்கலையும், அபயகரம் காத்தலையும், தீ யேந்திய திருக்கரம் அழித்தலையும், ஊன்றிய திருவடி மறைத்தலையும், தூக்கிய திருத்தாள் அருளலையும் காட்டுகின்றன. அவரால் அக்கிருத்தியங்களுக்கென நியமிக்கப்பட்டவர் முறையே பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்பவர். அவ்வம் பலவாணர் தம் நடனத்தை நிறுத்தினால் அப்பிரமன் முதலியோரால் தமக்குரிய அத்தொழில்களைச் செய்யமுடியாது.

சர்வான்மாக்களும் உபாசித்தற்குரிய ஒரே பரம்பொருள் மலர்மிசை யேகினாராகிய அம்பலவாணரே. அவ்வான்மாக்கள் சிவோகம் பாவனையால் அவரைத் தம் இருதய கமலத்தில் தியானிக்க வேண்டும். அத்தியான முதிர்ச்சியால் அவற்றின் பந்தம் நீங்கும். நீங்கவே அவை பெறுவது இறவாத இன்பம். அதுவே முக்தியாம். நடராஜரின் தூக்கிய பாதம் சிறிதுவளைவுடையது. மெய்யடியார் சிரசு அதிற் பொருந்தி அடங்கி நிற்கும். அதுதான் தாடலைபோல் காறலைபோல் நிற்றலென்பதாம். இரண்டறக் கலத்தல் என்னும் சைவசித்தாந்த முத்தி அதுவே. தூக்கிய பாதம் சிவசக்திக் குரியதாகி இன்ப நிலையமாதலின் அதை 'மாணடி' என்றும், அதைப் போய்ச் சேர்தலே வாழ்க்கையின் குறிக்கோளாதலின் அதனைச் சேர்ந்த முத்தரைச் 'சேர்ந்தார்' என்றும்திருக்குறள் கூறியது. அது கூறிய 'நிலமிசை' யாவது மிசை நிலம். மிசைநிலம்—மேல்நிலம். எதற்கு மேலுள்ள நிலம்? தத்துவக்கூட்டத்துக்கு மேலுள்ள நிலம். ஆகலின் அது அக்குஞ்சித பாத நீழலே- 'நீடுவாழ்வார்' என்பது இறவாத இன்பந் துய்த்து மீளப் பிறவாமல் வாழ்வார் என்னும் பொருளது. சர்வான்மாக்களுக்கும் பிதா நடராஜர்; மாதா சிவகாமசுந்தரியார்புத்திரர் இன்பமடைவதைக் கண்டுதாய்மகிழ்வாள்ஆனந்தநட

னம் ஆன்மாக்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பது முத்தான்மாக்கள் அவ்வானந்தத்தை யனுபவிக்கின்றனர். சிவகாமசுந்தரியார் அதைக்கண்டு மகிழ்கிறார்- ஆகலின் நடராஜர் தம் நடனத்தால் அப்பெருமாட்டியாரை மகிழ்விக்கிறாரென்பதற்கு அதுவே கருத்தென்க.

சிதம்பரத்தில் நடராஜர் எழுந்தருளியிருக்கும் பீடம் பிரணவத்தையும், அவரைச் சூழ்ந்துள்ள நான்கு பொற்றூண்கள் இருக்கு முதலிய நான்கு வேதங்களையும் அவற்றை யடுத்துள்ள இருபத்தெட்டுத் தூண்கள் காமிக முதலிய இருபத்தெட்டுச் சிவாகமங்களையுங் குறிக்கின்றன. முன்னுள்ள ஐந்துபடிகளும் பஞ்சாக்கரப் படிகளாம். அவ்வாலயத்திலுள்ள பிறபகுதிகளையும், அவை குறிப்பனவற்றையும் இவ்வாறே தெரிந்துகொள்க. சிவாகமங்களே வேதங்களுக்குச் சரியான பாஷ்யம். வேதங்களுக்குப் பிரணவமே மூலம். பிரணவப் பொருளாயுள்ளவர் அம்பலவாணரே. பிரணவத்தை 'ஈசன் மேவரு பீடம்' என்றது கந்தபுராணம். இவ்வுண்மையை அவ்வமைப்புக்காட்டுகிறது. வேதத்தை ஓதும்போது முதலிலும் முடிவிலும் பிரணவமாகிய 'ஓம்' என்று சொல்லவேண்டும் 'ஓமென்று மறைபயில்வார்' என்றது திருமுறை. பன்னிரண்டு திருமுறைகளும் வேதத்துக்கு மொழியாலும், ஆசிரியராலும் வேறுபடுவன அன்றிப் பொருளாற் சிறிதும் வேறுபடா. ஆகலின் அத்திருமுறைகளை ஓதும்போது முதலிலும் முடிவிலும் பிரணவ அந்தர்க்கதமாயுள்ள 'திருச்சிற்றம்பலம்' சொல்லவேண்டும். அது சைவசமய மரபு.

---

## தொழிலாளர் இன்சூரன்ஸ்

தொழிலாளர்களுக்கான 'அரசாங்க இன்சூரன்ஸ்' திட்டம் இப்பொழுது சுமார் 30 தொழில் துறை பிரதேசங்களில் அமுல் நடத்தப்பட்டுவருகிறது; அதன்கீழ் மொத்தம் சுமார் 10 லட்சம் தொழிலாளர்கள் பயன்பெற்று வருகின்றனர்.

---

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-26
மன்மத - பங்குனி-30
12-4-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## பாலை

*தலைவன் பொருள்வயிற் பிரிதலால் மெலிந்த தலைவி அழிந்துகூறியது.*

தேம்படு சிலம்பிற் றெள்ளற றழீஇய, துறுக லயல தூமண லடைகரை, யலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப், பொதும்புதோறல்கும் பூங்க ணிருங்குயில், கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க்கையிட், டகற லோம்புமி னறிவுடை யீரெனக், கையறத் துறப்போர்க் கழறுவ போல, மெய்யுற விருந்து மேவர நுவல: வின்னாதாகிய காலைப் பொருள்வயிற், பிரித லாடவர்க் கியல்பெனி, னரிதுமன் றம்ம வறத்தினும் பொருளே. 243 :-காமக்கணிப்பசலையார்

*தேனையுடைய மலையில் தெளிந்த நீர்சூழ்ந்த துறுகல்லின் அயலிலேயுள்ள தூய மணலடுத்த கரையிலே அசைகின்ற கிளைகளிலே தழைத்த நறிய வடுக்களையுடைய மாமரமிக்க சோலைதோறும் தங்கிய சிவந்த கண்களையுடைய கரிய குயில்கள் சூதாடு கருவி பெயர்ந்து விழுவது போன்ற நிலையில்லாத பொருளீட்டும் வாழ்க்கையை மேற்கொண்டு அறிவுடையீர்! நீங்கள் உங்கள் காதலிமாரை விட்டுப் பிரியாது கலந்தேயிருங்கள் என்று செயலறும்படி கைவிட்டுத் துறந்துசெல்லுவோரை இடித்துரைப்பன போல ஆணும் பெண்ணும் மெய்யொடு மெய்சேர இருந்து பொருந்தக் கூவ இன்னாததாகிய இளவேனிற் காலத்துப் பொருள் வயிற்பிரிதல் ஆடவர்க்கு இயல்பென்னில், அறத்தைக் காட்டினும் பொருள் அரியது போலும்! இது மிக்க வியப்பாகும்.*

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

கூறுமி னீசனைச் செய்மின்குற் றேவல் குளிர்மின்கண்கள்
தேறுமின் சித்தந் தெளிமின் சிவனைச் செறுமின்செற்ற
மாறுமின் வேட்கை யறுமி னவல மிவைநெறியா
வேறுமின் வானத் திருமின் விருந்தா யிமையவர்க்கே.

:-பொன்வண்ணத்தந்தாதி-70

உரை:- ஈசனை-எல்லாருக்கும் இறைவனாகிய சிவபெருமானை, கூறுமின்-ஏத்தித் துதி செய்யுங்கள், குற்றேவல் செய்மின்-அவனும் அவனருள் பெற்ற அடியார்களும் கட்டளையிடுகின்ற திருத்தொண்டுகளைச் செய்யுங்கள், கண்கள் குளிர்மின்-அவர்களது வேடம் பொலிந்த திருவுருவங்களைப் பார்த்து மகிழுங்கள், சித்தம் தேறுமின்-இவற்றின் பயனாக உள்ளத்தெளிவை அடையுங்கள், சிவனைத் தெளிமின்-முதற்பொருள் சிவபெருமானே என்னும் உறுதிப்பாட்டை அடையுங்கள், செற்றம் செறுமின்-சினத்தை ஒழியுங்கள், வேட்கை ஆறுமின்-விருப்பத்தை அகற்றுங்கள், அவலம் அறுமின்-கேட்டை அழியுங்கள், இவை நெறியா-இவைகள் வழிகளாய் அமைய, வானத்து ஏறுமின்-மேலுலகத்தை அடையுங்கள், இமையவர்க்கு-தேவர்களுக்கு, விருந்தாய்-விருந்தினராய், இருமின் - இருங்கள்' என்பதாகும்.

பதினொராந் திருமுறை ஆசிரியர் பன்னிருவரில், திருத்தொண்டத் தொகையில் இடம் பெற்றுள்ள தனியடியார் மூவரும், தொகையடியாராகிய பொய்யடிமையில்லாத புலவரில் நால்வரும் உள்ளார்கள். தனியடியார் காரைக்காலம்மையாரும், ஐயடிகள் காடவர்கோன் நாயனாரும் சேரமான் பெருமாள் நாயனாருமாவர். பொய்யடிமையில்லாத புலவர் நக்கீரதேவர், கல்லாட

தேவர், கபிலதேவர், பரண தேவர் என்போர்.

இத்திருமுறையிலுள்ள பிரபந்தங்கள் நாற்பதினுள் சேரமான் பெருமாள் நாயனார் இயற்றியவை மூன்று. அவை பொன் வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கைலாயஞானவுலா என்பனவாகும். பண்டைக்காலத் தமிழ் மன்னரிற் பலர் புவியரசராயிருந்து புகழ்பெற்று வாழ்ந்ததோடு, கவியரசராயும் இருந்து கவினுற விளங்கினரென்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. கவிஞரிலும் சாவா மூவாக் கவிஞராகக் கடவுட்டிறம்பேசிய பெருமை கழறிற்றறிவாருக்கு உண்டு.

நம்பியாரூரரை ஆண்டவன் தோழமை கொண்டமையால் அவர் தம்பிரான் தோழரென அழைக்கப்பெற்றார். அவருக்குச் சேரமான் தோழரென் மற்றொரு பெயரும் உண்டு. அது, சேரமான் பெருமானை அவர் தோழமை கொண்டமையால் வந்தது. 'மானச் சேரர் பெருமானார் தாமும் வன்றொண்டருங்கலந்த, பான்மை நண்பாற் சேரமான் றோழ ரென்று பார் பரவு, மேன்மை நாம முனைப் பாடி வேந்தர்க் காகி விளங்கியதால்' என்பார் சேக்கிழார் பெருமான்.

சிதம்பரத்திலிருந்த நம்பியாரூரரைக் கொடுங்கோளூரிலிருந்த சேரமான் பெருமானுக்குச் சிதம்பரேசர் நினை வூட்டினார். திருச்சிலம்போசை நெறிவழியே சென்று நிருத்தனைக் கும்பிடும் நியமமுடைய சேரமான், சிதம்பரேசரை நின்று கேட்டு வ்ரும்படி தாழ்த்தியஉளர்சேர்பதிகம் பாடும் வன்றொண்டரை, என்பு முருக வுயிரொன்றி யுடம்பு மொன்று விசைந்து தோழமை கொண்ட இடம் திருவாரூராகும். வன்றொண்டப் பெருந்தகையாரோடு திருவாரூரில் தங்கியிருந்த நாளில் 'திருவாரூர் மும்மணிக்கோவை'யைச் சேரமான் பாடினார்.

ஆரூரர் கழல் போற்றிப் புரசை யானைமுன் சேவித்து வெள்ளிமாமலைக்குச் சென்ற போது, திருக்கைலாய ஞானவுலாப் பாடப்பெற்றது. இவ்விரண்டு நிகழ்ச்சிகளுக்கும் முன்னர்த் தில்லைத் திருச்சிற்றம்பலத்தை வணங்கியபொழுது பாடியது பொன்வண்ணத்தந்தாதி. இது நூறு கட்டளைக் கலித்துறைகளைக் கொண்டது.

இதன் முதற்செய்யுள் 'பொன் வண்ணம்' என்று தொடங்கும். இறுதிச் செய்யுள் 'பொன்வண்ணமே' என்று முடியும். 'வெள்ளிமலை யரன் முன் சென்று ஆதியுலா அரங்கேற்றிய சேரர்பிரான், மன்றிடையே யோதுபொன் வண்ணத் தந்தாதி' என்பது பிற்காலத்து ஆன்றோர் வாக்கு.

'இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்' என்பது யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் திருவாக்கு. இந்த உடம்பையும் கருவி கரணங்களையும் இறைவன் நமக்குத் தந்தது, நாம் அவற்றை அவன் பொருட்டாகவே பயன்படுத்தி மீண்டும் உடம்பு கொண்டு பிறப்பதும் இறப்பதுமாகிய உழல்வினை அடையாது உயர்நிலை அடைதற்காகவே என்பதை ஒவ்வொருமனிதனும் உணர்ந்து ஒழுகுதல்வேண்டும்.

'வணங்கத் தலைவைத்து வார் கழல்வாய் வாழ்த்தவைத்து' என்பது திருவாசகம். வாய் பெற்ற பயன் ஆண்டவனை வாழ்த்துவதே என்பதைத் திருமுறைகள் பல இடங்களில் வலியுறுத்துகின்றன. வாழ்கின்ற நாட்களில் இறைவனை வாழ்த்தாதநாட்கள் பயனின்றிக் கழிந்தவை யென்பதை 'பேசாதநாளெல்லாம் பிறவா நாளே' என்று அப்பர் பெருமான் கூறுவார்.

மனமொழிமெய்யாகிய மூன்று கரணங்களில் எளிமையாக இறைவனுக்கு ஆக்கத் தக்கதாக அமைந்திருப்பது மொழியொன்றேயாகும். உலகியலிற் செல்லுவதிலேயே பெரும்பாலும் ஈடுபடுகின்ற இயல்புடையது மனம். அதனைக் கட்டுப்படுத்தி வழிமாற்றிச் செலுத்துவது அவ்வளவு எளிமையானதல்ல. மெய்த்தொண்டு உழைப்பினால் நிகழவேண்டியதாதலின் அதுவும் கடுமையானதுதான்.

எனவேதான் 'கூறுமின் ஈசனை' என்று முதலில் எளிய தொண்டில் ஈடுபடுத்துகிறார். பேச்சு இறைவன் பக்கலில் ஆகி உறைப்பேற ஏற முறையே மெய்யும் மனமும் அவனுக்காவது தொடர்ந்து கைகூடிவிடும். ஈசன் விளக்கமாக உறைகின்ற இடங்கள் மூன்று என்று சொல்லப்பெறும். அவை குருலிங்க சங்கமங்களாம்.

அறுபான் மும்மை நாயன்மாராதிய திருத்தொண்டர்கள் வரலாற்றில் குருலிங்க சங்கம வழி

பாடுகள் காணப்பெறும். 'மாசி கர் தம்மைச் சிவநேசர் தம்மையும், ஈசனென வே யு ள த் தூ ளெண்' என்பது சைவ சமய நெறி. ஆகவே கூறுவதும், குற்றேவல் செய்வதும் சித்தம்தேறுவதும்' குருலிங்க சங்கமங்களாக இருக்கும் இறைவனைப் பற்றி நிகழவேண்டியவை என்பது உணரத்தக்கதாகும்.

சங்கமமாகிய சிவவேடம் புண்ணியர்கள் கண்ணைக் குளிர்விக்கும். உண்மையன்பால் ஒன்றிக் கலக்கும் அமைதிபெற்ற காதலர்களிடையே; தலைவியின் ஆடை அணிகலன் முதலாயின, தலைவனுக்குக் கண்டமாத்திரத்தில் இன்பத்தை விளைவித்தல் போல, மெய்யன்பர்களாகிய திருத்தொண்டர்களுக்குச் சிவவேடம் கட்புலனுக்கு இன்பந் தந்து மகிழ்வூட்டும். உவர்மண்ணால் வெளுத்த உடம்புடன் எதிர்ப்பட்ட வண்ணானைக் கண்டு 'திருநீற்றின் வாரவேடம் நினைப்பித்தீர்' என்று இவ்வாசிரியப் பெருந்தகையாகிய சேரமான் கீழேவிழுந்து வணங்கிய செய்தி இங்கே நினைவுகூரத் தக்கதாகும்.

சிந்தனையும் வந்தனையும் வாக்குமாகிய மூன்றையும் சிவன் பொருட்டாக ஆக்கிவிட்டால் சிவபோதங் கழன்று சிவபோதத்தினுள் அடங்கிநிற்கும் தெளிவு உண்டாகும். அத்தெளிவு 'சிவமாம் தெய்வத்தின் மேற்றெய்வம் இல்லையென்னும் உணர்ச்சியில் ஊன்றிநிற்கச் செய்யும் சீவனுக்கு இயல்பாயமைந்த தீக்குணங்கள் பலவற்றுள் சினமும் ஒன்று. இது மற்றெல்லாத் தீக்குணங்களையும் விடக்கொடியது. இதனாலேயே 'ஆறுவது சினம்' என்று எடுத்த எடுப்பிலேயே ஔவையார் அறிவுறுத்தினர். 'சினமே தவிராய்' என்பது குருஞான சம்பந்தப்பெருமான் திருவாக்கு. சினத்தின்கொடுமையை எண்ணிப்பார்த்த மணிமேகலையாசிரியர் 'புற்றடங் காவிற் செற்றம்' என்று அதற்குப் பாம்பை உவமை கூறினர். இத்தகைய கொடுமையையுடைய சினம் நீங்குதற்குச் சிவத்தேற்றம் துணைசெய்யும்.

'அவாவென்ப வெல்லாவுயிர்க்குமெஞ் ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து' என்பது திருக்குறள் 'ஆசை அறுமின்கள், ஆசை அறுமின்கள் ஈசனோடாயினுமாசையறுமின்கள்' என்பார் திருமூலர். ஆசைபாசத்திற்கு வித்து, இதனாலேயே 'ஆசை

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

அப்படிக்கொள்வது வரம்பழிப்பதாகுமென நான் சொன்னால், அவ்வாங்கில வசனத்தை உடனே எடுத்துக்காட்டுவாரவர். ஆகலின் உண்மையில் அவர் சைவத்தை வளர்க்கவில்லை, எதையோ வளர்க்கிறார். அதற்கு என்னென்னவோ பெயர்கள் சூட்டுகிறார். சிவனை வணங்கவில்லை, எவனையோ வணங்குகிறார், அவனுக்கு என்னென்னவோ பெயர்களிடுகிறார்'

'(இராமலிங்கர்) சாதிகளையும் மதங்களையும் சாத்திரக் குப்பைகளையும் வன்மையாக...கண்டித்துப் பாடியுள்ளார்' (18-9-55 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். 'சாதி விடாத குணங்கள்' 'கற்றல் கேட்ட லுடையார் பெரியார்', 'முனிவரு மன்னரு மூன்றுவ பொன்றுன் முடியும்', 'உடம்பை வளர்த்தே னுயிர் வளர்த்தேனே' என்றது திருமுறை, சாதிநலம், கல்விப் பெருக்கம், பொருள்வளம், தேகசுகம் ஆகிய நான்கும் வேண்டுமென்பது கருத்து. அத்திருமுறைதானே 'சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழி' 'கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும்', 'வேண்டேன் செல்வம்', 'பழியுடை யாக்கை' என்றுஞ் சொல்லிற்று. அந்நான்கும் வேண்டாமென்பது கருத்து. அவ்வேண்டுமென்பதும் வேண்டாமென்பதும் முரண். அப்படி அஃதேன் சொன்னது? சர்வான்மாக்களும் சைவசமயத்தைச் சார்ந்து சிவோபாசனை செய்தே முத்திபெறுதற் குரியன். அதற்காக அச்சமயம் இவ்வுலகில் நின்று நிலவுதல் இன்றியமையாததாயிற்று. அந்நிலவுதலை இத்தமிழ்நாட்டிற் செய்து வைத்தவர் அத்திருமுறையாசிரியன்மாரே. அவரது பேரருட்டிறம் அதனால் கண்டுகொள்ளப்படும். முத்திதாவல்ல முழுமுதற் கடவுளாவார் சிவபிரானொருவரே. அவ்வுண்மையை மறுத்துப்பேசுபவரும், மறந்து திரிபவரும் உளராயினர். அவர் பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மருள்மேலிட்டு அந்நான்கையும் சாசுவிதமெனக்கொண்டு செருக்

குபவர். அச்செருக்கை வீழ்த்த வேண்டும். அதற்காக அந் நான்கின் நிலையாமை முதலிய வற்றை அவ்வாசிரியன்மார் விளக்கினர் அவ்விளக்கமே அவைபற்றியபழிப்புரை. ஆனூற் பூர்வபுண்ணிய முடையார் அவற்றைச் சிவோபாசனைக்குச் சாதகமாக்கி மகிழ்வர். அங்ஙனம் ஆக்குவோர்க்கு அவை போற் றப்படவேண்டுமென உணர்த்து முகத்தால் அவ்வாசிரியன்மாரால் மதித்துப் பேசப்பட்டன. இந் நிலையில் அவை பழிக்கப்படும் போதும், மதிக்கப்படும்போதும் சமமாகவே கொள்ளப்படும். 'பிறப்புடையர் கற்ரூேர் பெருஞ் செல்வர் மற்றுஞ், சிறப்புடைய ராணுலுஞ் சீசீ-யிறப்பில், கடி யார் நறுஞ்சோலைக் காளத்தி யாள்வா, னடியாரைப் பேணு தவர்' என்ற திருமுறை காண்க. அங்ஙனமாக, அம்முரணுக்கிட மேது? அவ்வாசிரியன்மார் வகை கெட்டு அந்நான்கையும் ஒழிக் கச்சொல்லவில்லை. அவரது திரு வுள்ளத்தைக் கண்டறிய மாட் டாதவருக்கு அவ்வுண்மை புலப் படாது. நவீனர் அவ்வாசிரியன் மாரைப் பின்பற்றி யொழுகுகிற சைவரா யிருந்தால் ஒழிக்கும் விஷயத்திலும், போற்றும் விஷயத்திலும் அந் நான்கிலும் சமநோக்குடையராதல் வேண் டும். ஆனுல் அவர் உலக சுகத் தில் சொக்கிக் கிடக்கவிரும்பு கிருர். அதற்குச் சாதிக ளிருப் பது பிரதிகூலம்; மற்ற மூன் றுமிருப்பது அநுகூலம்; ஆகலின் அவர் சாதிகளைமாத்திரம் சீசீ யென்ருர். மற்றைச் சீசீக்கள் மூன்றும் அவருக்குத்தேவாமுத மாயின. இராமலிங்கர் சாதிப் பழிப்புப் பாடல்களைப் பாடா விட்டாலுங்கூட அவர் அப் பழிப்புப் பிரசாரத்தை விடார்; தாமே அன்ன பாடல்களை யாக் கிக் கொள்வர். அவர் பிரசாரத் தில் திருக்குறள் குறுக்கிடும். அதையும் உதறிவிடுவா ரவர். திருவள்ளுவர் 'பார்ப்பான் பிறப்பு' எனக்கூறிப் பார்ப்பனச் சாதியுண்மையை ஏற்று மதித் தார்; அந்தரங்க பகிரங்க விப சாரப் பெண்டிர் வயிற்றி லுதித் தாரெனும் பொருள்படக் 'குலத்தின்கணையப்படும்' எனக் கூறிக் குலநல மில்லாமையு முண்டெனக் கொண்டார்; 'இழிந்த பிறப்பாய்விடும்' எனக் கூறிப் பிறப்பில் இழிவுண் டெனக் காட்டினர். இப்பின்னி ரண் டடிகளிலிருந்து உண்டா னது இந்நாட்டுச் சாமானியர் ஒருவரோடொருவர் சண்டையி டுங்காலத்தில் வழங்குகிறவைதல் வாசகமென்பதையறிக.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணே



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

மன்மத பங்குனி-30

## திருமுலைப்பால்

தவம் பெருக்குஞ் சண்பையிலே தாவில் சராசரங்களெல்லாம் சிவம் பெருக்கத் திருவவதாரஞ் செய்த ஆளுடைய பிள்ளையார், சிவஞான சம்பந்தராக ஆன நன்னாள் சித்திரை மாதத்துத் திருவாதிரைநாளாகும். 'முதல்வனை, ஆதிரையானாதிரையானென்றென் றயருமால், ஊர்திரைநீர் வேலி யுலகு' என்பது முத்தொள்ளாயிரம்.

பிறப்பிறப்பற்ற சிவபெருமானை ஆதிரையிற் பிறந்தானென்று உலகத்தார் உபசரித்துக் கொண்டாடுவர். அவ்வாதிரை நன்னாளே, ஆளுடைய பிள்ளையார் அவதரித்த நாளென்று வரலாறு கூறுகின்றது. சிவனின் வேறல்லாத திருஞான சம்பந்தப் பெருமானைத் திருவாதிரையானென்று போற்றுவது பொருத்தமேயாகும்.

ஆதிரை நாளில் உலகுய்யத் தோன்றிய அருட்குழந்தை, அவ்வாதிரை நாளிலேயே அம்மையப்பரின் அருள்வேண்டி அழுதது. அழுததற்குக் காரணத்தை அறியாதவர் போல ஐயப்பாடாக இரண்டு காரணங்களை எடுத்துரைத்தார் சேக்கிழார்பெருமான். ஒன்று: பிள்ளையாருக்கும்-பிரமாபுர மேவிய பெம்மானுக்கும் இருந்த முன்னைச் சார்பு. மற்றொன்று: பிள்ளைமைத் தன்மை.

முன்னைச் சார்பு அப்பனையும் பிள்ளைமைத் தன்மை அம்மையையும் நினைவகூர்ந்து அழைக்கச்செய்தன - அழச்செய்தன. 'அம்மேயப் பாவேன்றேன் றழைத்தருளி ய ழு தருளி' என்பது சேக்கிழார் பெருமா ன் திருவாக்கு.

அ ழை த் த ழு த பிள்ளைக்கு ஞ ா ன ங் குழைத்தமுதம் கோடுத்தாள் திருநிலைநாயகி. ஏறக்குறைய ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்த இ ந் நி க ழ் ச் சி இன்றுவரையும் இனியும் சீகாழித் திருக்கோயிலில் சித்திரைத் திருவாதிரைத் திருநாளில் காணக்கிடைப்பதாயிருக்கின்றது - இருக்குமேன்ருல், திருமுலைப்பால் கண்டு ம று முலைப்பால் காணுத பெருவாழ்வை அடையவேண்டியது நமதுகடமையு ா கு மல்லவா? இவ் வ ா ண் டுத் திருமுலைப்பால் **16-4-56** திங்கட்கிழமை.

# சிவஞான சுவாமிகள்

திருவாவடுதுறை ஆதீனக் குரு மூர்த்திகளின் சிவஞானச் செல்வமெல்லாம் திரண்டு ஓர் உருவெடுத்துச் சிவஞான சுவாமிகளாக வந்து நம்மை நாளும் ந ா ளு ம் உய்யக் கோள்ளுகின்றது எ ன் ப தை ச் சைவ நன்மக்கள் நன்கு அறிவார்கள். அகத்திய முனிவர் அநுக்கிர கத்தால் ெப ா தி ய வ ரைப்பில் உதித்த இச்சைவ ஞாயிறு, துறைசைக் குரவரின் அருளுேக்கத்தால் ஞானப்பிழம்பாக ஒ ளி விட்டது.

வடமோழியும் தேன்மோழியுமாகிய இரண்டு கடல்களையும் ஒ ரு சேர நிலைகண்டுணர்ந்த பெருமை நமது சுவாமிகள் ஒ ரு வ ரு க் கே யன்றி வேறுயாருக்கும் இல் லை. வேதாந்தத் தேளிவாகிய சைவ சித்தாந்தத்தை உண்மையாக உணருவதற்கு வழிசெய்துதந்த இம்முனிவர் பெருமானுக்கு இ ணை ய ா க வேறு யாருளர்?

சிவஞானபோதத்தை ந ம க் கு வ ழ ங் கி ய மெய்கண்டதேவரை விடச் சிறந்த உபகாரி சி வ ஞான சுவாமிகளேயாவார்கள். சித்தாந்த சைவ உண்மைகளைச் சிவஞான ப ே ா தத்துள் தோகுத்துவைத்தார் மெய்கண்டதேவர். அ வ ற் றை விரித்துணர்த்திப் பாடியஞ் செய்தவர் இம்முனிவர் பெருமானுதலின் இவரே மெ ய் க ண் ட தேவரை விளங்கவைத்த மேதகை என்பது நினைவு கூ ர த் தக்கதாகும். இப் பெருமானது ந ன் ஞ ள் **19-4-56** வியாழனன்று இ வ ர து பேருப காரத்தை நி னை ந் து வழிபட்டுப் பயன்பேறுவோமாக.

## கீரணிப்பட்டி

இளையாற்றக்குடி ஸ்ரீ கைலாச நாதசுவாமி நித்திய கல்யாணி அம்மன் தேவஸ்தானத்தைச் சேர்ந்த கிரணிப்பட்டி ஸ்ரீமுத்து மாரிஅம்மன் மஹோத்சவம் 8-4.56 முதல் 17-4-56 வரை நடைபெறும். 13உ ரிஷப வாகனம். 16உ தேர். உற்சவத்தில் நாதசுரக்கச்சேரியும் தேவாரக் கோஷ்டியும் நிகழும்.

## பர்மா நிலங்களுக்கு நட்டஈடு

சென்னை ஏப் 5-

பர்மாவில் 1953-54 1954-55ம் ஆண்டுகளில் அரசாங்கம் மேற்கொண்ட நிலங்களுக்கு நட்டஈடு கோரும் நிலச்சொந்தக்காரர்களிடமிருந்து மனுக்களை அனுப்புமாறு பர்மா அரசாங்கம் கேட்டுக்கொண்டிருக்கிறது. பர்மாவிலிருக்கும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு நேரிடையாகவோ அல்லது இரங்கூனிலுள்ள நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கத்தின் மூலமாகவோ இம்மனுக்களை அனுப்பிவைக்கலாம்.

---

## ரயில் கால அறிவிப்பு

| நம | தேவகோட்டை ரஸ் | காரைக்குடி வரு | புறப் |
|---|---|---|---|
| மானாமதுரைக்கு | | | |
| 629 | 5-2 | | 4-55 |
| R C | 6-25 | 6-8 | 6-11 |
| 601 | 8-41 | 8-24 | 8-34 |
| R C | | 9-50 | |
| 657 | 15-7 | 14-35 | 15-0 |
| R C | | 17-10 | |
| 653 | 17-27 | | 17-20 |
| R C | 20-14 | 20-0 | 20-3 |
| 607 | 1-3 | 0-48 | 0-56 |
| திருச்சிராப்பள்ளிக்கு | | | |
| 785 | 3-57 | 4-15 | |
| R C | 6-35 | 6-42 | 6-57 |
| 630 | 9-26 | 9-42 | |
| R C | | | 10-10 |
| 658 | 11-59 | 12-9 | 12-17 |
| RC | | | 17-30 |
| 602 | 17-55 | 18-20 | 18-28 |
| RC | 20-24 | 20-31 | 20-46 |
| 608 | 0-38 | 0-54 | 1-4 |
| மாயூரத்திற்கு | | | |
| 645 | | 10-55 | —— |
| 625 | | 14-52 | —— |
| 639 | —— | 22-25 | —— |
| 636 | —— | —— | 4-25 |
| 640 | | —— | 11—— |
| 626 | | | 15-55 |

( 5ம் பக்கத் தொடர்ச்சி )

யருய் பாசம் விடாய்' என்று சிவ போகசாரம் கூறுகின்றது. ஆசை காமமென்றும், கோபம் குரோதமென்றும் வடமொழியிற் குறிக்கப்பெற்று, அவ்விரண்டு குணங்களையும் இரண்டு திருடர்களாக அறிவுறுத்துகிற சுலோகம் ஒன்றுஉண்டு. 'அழுக்காறு அவா வெகுளி இன்னச்சொல் நான்கும். இழுக்காவியன்ற தறம்' என்ற திருக்குறளில் நடுஇடம் பெற்றிருப்பவை அவாவும் வெகுளியுமேயாம்.

வேட்கையும் வெகுளியும் அற்றபொழுது கேடு என்ற ஒன்றிற்கு இடமே கிடையாது. இத்தகைய உயர்பண்பு வாய்க்கப்பெற்றவர்கள் 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்று மார்தட்டிப் பேசுவார்கள். நன்றுடையானும் தீயதில்லானுமாகிய சிராப்பள்ளிக் குன்றுடையானைக்கூற உள்ளங்குளிருமென்பார் ஆளுடைய பிள்ளை.

இமையவர், துன்பங் கலவாத இன்பவாழ்வினர். அவருக்கு விருந்தாகி அவாற் பாராட்டப்பெற வேண்டுமென்றால், குருலிங்க சங்கமங்களை மனமொழி மெய்களால் வழிபட்டுக் கண்குளிரக் கண்டு, சித்தந்தேறிச், சிவனைத் தெளிந்து, காமக்குரோதங்கள் நீங்கக் கேட்டை ஒழித்து வாழ வேண்டுமென்று இத்திருப்பாடல் அறிவிப்பதை நாம் நினைவுகூர்ந்து முயற்சி செய்தல் வேண்டுமல்லவா?

---

## நோட்டீஸ்

வெள்ளூரிலிருக்கும் ராமாயி அறிவிப்பது:-

என்னிடமிருந்து பிறட்டான ஷாத்துக்கள் கண்டு மோசமாக குமாரி ந. துரைசாமி அம்பலம் ஒரு செட்டில்மெண்டு தஸ்தாவேஜ் எழுதிவாங்கிக் கொண்டிருக்கிறார். அது செல்லக்கூடியதில்லை. அதில்கண்ட சொத்துக்கள் எதையும் யாரும் கிரயம் ஒத்திவகையராவாங்கக் கூடாது என்றும் அவ்விதம்செய்தால்பாத்தியம் ஏற்படாதென்றும் இதன் மூலம்அறிவித்திருக்கிறது.

வெள்ளூர்
3-4-56

—இந்தக் கிரல்
ராமாயி

# வைகாசி அனுடம் வள்ளுவர் திருநாள்

பலகாரணங்களாற் பிளவு பட்டுக் கிடக்கும் தமிழினத்தை மாத்திரமின்றி உலகம் முழுவதையுமே ஒன்றுபடுத்தும் ஆற்றல் திருக்குறளுக்கே உரியதென்பதையும், அதன் ஆசிரியருடைய திருநாளை யாவருங் கொண்டாடச்செய்தல் எல்லா மக்களையும் ஒருமுகப்படுத்துதற்குச் சாலச் சிறந்ததொரு வழியென்பதையும் யாவரும் அறிவார்கள். எல்லோருஞ் சேர்ந்து கொண்டாடத் தக்கதான ஒரு நாளில்லாத குறையை நீக்கவும், வள்ளுவருடைய அரிய கருத்துக்கள்-வாழ்வாங்கு வாழும் நெறிகள் - வளர்ந்தவர்களுடைய உள்ளங்களில் மாத்திரமன்றிக் குழந்தைகளுடைய உள்ளங்களிலும் வேரூன்றிப் பயனளிக்கத் தக்கதாகவுந் திருவள்ளுவர் திருநாளைத் தமிழினத்தினை ஒன்று படுத்தும் ஒருநாளாகத் -தமிழரின் தனிப்பெருந் திருநாளாக-ஆண்டுதோறும் யாவரையுங் கொண்டாடச்செய்ய எண்ணினோம்.

சென்ற மூன்று ஆண்டுகளிலும் வைகாசி அனுடத்தை வள்ளுவர் திருநாளாகக்கொண்டாடுமாறு அறிக்கைகள் வெளியிட்டுத் தமிழ்மக்கள் வாழும்இடங்களெங்கும் இந்நாளைக் கொண்டாடச் செய்தோம். எண்பதுக்கு மேற்பட்ட பத்திரிகைகள் எம்முடைய அறிக்கைகளை வெளியிட்டும், இந்நாளைப்பற்றி ஆசிரியர் உரை, குறிப்புரை முதலியன எழுதியும், திருவள்ளுவர் திருநாள்மலர் வெளியிட்டும் எமது முயற்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கின. தமிழ்நாடு வடஇந்தியா, இலங்கை, பர்மா, மலாயா, சிங்கப்பூர், தென்ஆப்பிரிக்கா, பீசி முதலிய பலஇடங்களிலுமுள்ள நூற்றுக்கணக்கான சங்கங்கள் இந்நாளைச் சிறப்பாகக் கொண்டாடின. சிங்கப்பூர், கொழும்பு, தெல்லி, திருச்சி சென்னை வானொலி நிலையங்கள் இந்நாளன்று சிறப்பு நிகழ்ச்சிகளை ஒலிபரப்பின. சாதி மத அரசியற்கட்சி வேறுபாடுகளின்றித் தமிழ்ப்பெருமக்கள் பலர் ஆதரவளித்தனர்

### வேண்டுகோள்

தமிழினைப் பேசும் மக்கள் யாவரும் ஒன்றுபட்டு ஆண்டு

தோறும் ஒவ்வொரு வீட்டிலுங் கொண்டாடுந் திருநாளாகத் திருவள்ளுவர் திருநாளை நன்கு நிலைத்திடச் செய்தல் தமிழ்ப் பெரு மக்களுடைய பெருங்கடனாகும். இதனை நன்கு நிறைவேற்றுதற்குச் செய்ய வேண்டிய பணிகள் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுகிறோம். தமிழினத்தின் ஒற்றுமைக்காகவும், தமிழ் மக்களின் நல் வாழ்விற்காகவும், தமிழ்மொழியின் வளர்ச்சிக்காகவும் இவற்றைச் செய்தருளுமாறு அன்பர்கள் யாவரையுங் கேட்டுக்கொள்கிறோம்.

1. பத்திரிகைகளும் சங்கங்கள், கல்விச்சாலைகள் முதலிய பொது நிலையங்களும் வைகாசி அனுடத்தை வள்ளுவர் திருநாளாக ஒவ்வொரு வீட்டிலுங் கொண்டாடுமாறு வற்புறுத்திக் கூறிக் கொண்டாடச் செய்தல். கொண்டாடும் முறைபற்றி அறிக்கைகள் வெளியிடல்.

2. பத்திரிகைகள்யாவும் திருவள்ளுவர் திருநாள்மலர் வெளியிடுதல் (சென்ற ஆண்டிலே சில பத்திரிகைகள் வெளியிட்டன.)

3. சங்கங்கள், மன்றங்கள், கழகங்கள், கல்விச்சாலைகள், முதலியன திருவள்ளுவர் திருநாளன்று பெரும்விழாக்களை நடத்தல். பேச்சுப்போட்டி, கட்டுரைப்போட்டிபாட்டுப்போட்டி திருக்குறள் மனனப் போட்டி முதலியனநடத்தல்.

4. வள்ளுவர் திருநாளாகிய வைகாசி அனுடத்தை அரசினர் விடுமுறை நாளாக்குவித்தல்.

5 நாட்குறிப்பு, நாட்காட்டி, பஞ்சாங்கம் முதலியன வெளியிடுவோர் இவற்றிலே வைகாசி அனுடத்தை வள்ளுவர் திருநாளாக ஆண்டுதோறுங் குறித்தல்

6. யாவருந் திருவள்ளுவர் தொடர் ஆண்டை வழங்குதல்.

இந்த ஆண்டுத் திருவள்ளுவர் திருநாள் 24-5-56 வியாழக்கிழமைஆகும். இந்த நாளை யாவரையுங் கொண்டாடுமாறு செய்தற்கு இப்பொழுதுதொடக்கமே முயலுதல் இன்றியமையாதது இத்திருநாளுடன் சிலநாள்களைச் சேர்த்து வள்ளுவர்வாரமாகவுங் கொண்டாடலம்.

தலைவர்: கா பொ இரத்தினம்,
செயலாளர்: இ சி சோதிநாதன்,
பொருளாளர்: மு ஆறுமுகன்
தமிழ்மறைக் கழகம்.
18/2 அத்திடியா வீதி, இரத்துமலானை, இலங்கை. தை-1,
தி. ஆ. 1987

---

## உங்களுக்குத் தெரியுமா?

மேற்குப் பாக்கிஸ்தானிலிருந்துஇடம் பெயர்ந்து வந்துள்ளவர்களுக்கு1956-57ல் நஷ்டஈடு வழங்குவதற்காக இந்திய சர்க்கார் 55.9 கோடி ருபாய் ஒதுக்கியிருக்கின்றனர்.

கரும்புப் பயிரைத் தாக்கும் பூச்சி பொட்டுகளை ஒழிப்பது பற்றி பிராந்திய நிலையங்களில் ஆராய்ச்சிகள் நடத்துவதற்காக, சுமார் 20 லட்சம்ரூபாய் செலவாகக்கூடிய பல திட்டங்களுக்கு இந்திய மத்தியகரும்புக் கமிட்டி அனுமதியளித்திருக்கிறது.

உத்தரப்பிரதேசத்தில்,டேராடூன்-முஸ்ஸோரிபகுதியில் சுமார் 25,40லட்சம் டன் உயர்தரமான சுண்ணும்புக் கல் படிவங்கள் இருப்பதாக இந்திய பூகர்ப்ப ஆராய்ச்சிஇலாகா கண்டுபிடித்திருக்கிறது.

இந்தியாவுக்குவருஷந்தோறும் 1,00,000டன் முதல் 1,50,000 டன்வரை கச்சா எஅம்புதேவைப்படுகிறது.

இந்தியாவில்தற்போது 19 காகிதஆலைகள் இயங்கிவருகின்றன.

இந்தியாவில் பூட் பாலீஷ் உற்பத்தி 1950ல் ஒவ்வொன்றும் 2அவுன்ஸ் கொண்ட டின்களில் மொத்தம் 23.1லட்சம் டன்னுக இருந்தது. 1955ல் 100 லட்சம் டன்னுகப்பெருகிவிட்டது.

வயதுவந்த சுரங்கத் தொழிலாளர்களுக்கு கல்வி, பொழுதுபோக்கு வசதிகளை அளித்துவருவதற்காக, நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் க்ஷேம நலநிதி ஸ்தாபனம் இதுவரைவயதுவந்தவர்களுக்கான 44கல்வி நிலயங்களை ஆரம்பித்துஇருக்கிறது

இந்தியாவில், 1955-56ம் ஆண்டில் மொத்தம் 2.38கோடி டன் நெல் உற்பத்தியாகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் 1954ம்ஆண்டில் 30ஆராய்ச்சிக் கூடங்களில் 1,10,000 மணங்குக்கு மேற்பட்ட நெய் தரப் படுத்தப்பட்டது.

இந்தியாவில் 1954-55ம்ஆண்டில் மொத்தம் 38,000 விசைத்

தறிகள் வேலை செய்துவந்ததாக மதிப்பிடப்பட்டுள்ளது.

இந்தியாவில் உற்பத்தி மின் சார உற்பத்தி அளவு, 1928-லிருந்து 1953 வரையுள்ள காலத்தில் 100 சதவிகிதத்துக்கும் அதிகமாகப்பெருகிவிட்டது.

இந்திய ரயில்வேக்கள், தற்போது பிரதிதினம் மொத்தம் சுமார் 36,00,000 பிரயாணிகளை ஏற்றிச்செல்கின்றன; 1938-39ம் ஆண்டில் சுமார் 14,50,000 பிரயாணிகளை ஏற்றிச் சென்றன.

உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்தின் அபிவிருத்திக்காக இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் மொத்தம் சுமார் 3.4 கோடிரூபாய் செலவு மதிப்புள்ள திட்டங்களை மேற்கொள்ள உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

1955-56ம் ஆண்டில் 29 தேசிய மாணவர்படை (பெண்கள்பிரிவு) முகாம்களில் மொத்தம் 3,558 கோடட் மாணவிகளுக்குப் பயிற்சி யளிக்கப்பட்டது.

பழவகைகள் உற்பத்தியின் அபிவிருத்திக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், மொத்தம் சுமார் 9கோடி ரூபாய் மதிப்புள்ள திட்டமொன்றை மேற்கொள்ள உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் நிலக்கரி உற்பத்தி 1954ம் ஆண்டில் 368.8 லட்சம் டன்னாக இருந்தது 1955ல் 382.2லட்சம் டன்னாகப் பெருகிவிட்டது.

இந்தியா 1955ம் ஆண்டில் மொத்தம் சுமார் 551.38 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள 98,787 டன் அரிசியை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தது.

இந்தியாவில் தற்போதுமொத்தம் சுமார் 17.85கோடி ரூபாய் செலவு மதிப்புள்ள ரஸ்தா, பால நிர்மாணவேலைகள் நடைபெற்று வருகின்றன.



ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.